# சிறுவர் தீந்தமிழ் வாசகம்

(ஐந்தாம் புத்தகம்)

[ஐந்தாம் வகுப்புக்குரியது]



ஆசிரியர் :

சி. ஜம்புலிங்கம், M.A., L.T.

*Approved for Class use: Vide Page 3 Part I and Page 21 Part II of Supplement I-B of Fort St. George Gazette dated 4 - 4 - '56.*

பதிப்பகம்:

ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்

**53-56, பவழக்காரத் தெரு :: சென்னை - 1**

 1955 [விலை அணா 10

## உள்ளுறை

# நாட்டு வணக்கம்

ஜனகண மனஅதி நாயக ஜெயஹே
பாரத பாக்யவி தாதா
பஞ்சாப சிந்துகுஜ ராதம ராட்டா
திராவிட உத்கல வங்கா
விந்த்ய ஹிமாசல யமுனு கங்கா
உத்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாஹே
தவசுப ஆஸிஷ மாஹே
ஜாஹே தவஜய காதா
ஜனகண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்யவி தாதா
ஜயஹே ! ஜயஹே ! ஜயஹே !
ஜயஜய ஜயஜய ஹே !

மகாகவி இரவீந்திரநாத தாகூர்

5—1

# 1. நம் தமிழ் நாடு

1. உலகில் பல நாடுகள் உள்ளன. ஒவ்வொரு நாட்டிற்கும் தனித்தனி பெயர் உண்டு. அப்பெயர்கள் அனைத்தும் மொழியின் பெயரால் அமைந்தவை. அவ்வாறே தமிழ் மொழி பேசும் மக்கள் வாழும் நிலப்பரப்பே 'தமிழ் நாடு' என்று வழங்கப்படுகிறது. தமிழர்களாகிய நாம், நம் நாட்டைக் குறித்துத் தெரிந்துகொள்ள வேண்டுவது அவசியம்.

2. தமிழ் நாட்டின் எல்லைகள், நம் முன்னோர்களால் முன்னமே நூல்களில் குறிக்கப்பட்டுள்ளன. வடக்கே வேங்கடமலையும், தெற்கே குமரி முனையும், கிழக்கிலும் மேற்கிலும் கடல்களும் எல்லைகள் எனக் கூறப்பட்டுள்ளன.

3. பண்டைக் காலத்தில் தமிழ் நாடு, மூன்று பெரும்பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது. அப்பிரிவுகள் சேர நாடு, சோழ நாடு, பாண்டி நாடு எனப்படும். இந்நாடுகளை முறையே சேரர், சோழர், பாண்டியர் என்ற பெருமன்னர் ஆண்டு வந்தனர். அவர்கள் ஆட்சியின்கீழ்ப் பல குறுநில மன்னர்களும் ஆண்டு வந்தார்கள்.

4. தென்னிந்தியாவின் மேற்குக் கடற்கரையை அடுத்துள்ள பகுதிகள் சேர நாடு எனப்படும். சேர நாட்டில் மலைகள் மிகுதியாய் உள்ளன. அங்குள்ள காடுகளில் யானைகள் அதிகம். அத-

ஞலேதான், "வேழமுடைத்து மலைநாடு," என்று ஔவையார் பாடினர். சேலம், கோயம்புத்தூர், மலையாளம் என்னும் மாவட்டங்களும், கொச்சி, திருவாங்கூர் என்னும் பகுதிகளும் சேரநாட்டைச் சேர்ந்தவை. சேர மன்னர் வஞ்சிமா நகரைத் தலை நகராகக் கொண்டு ஆண்டனர். அவர்கள் விற்போரில் வல்லவர்கள். அம்மன்னர்களுள் சேரன் செங்குட்டுவன் என்பவன் தமிழ் மன்னர்களைப் பழித்துப் பேசிய வடநாட்டு வேந்தர்களுடன் போர் செய்து வெற்றி கொண்டான். முசிறி, தொண்டி என்னும் துறைமுகப்பட்டினங்கள் சேர நாட்டைச் சேர்ந்தவை. சேரர்கள் அன்பாட்சி செய்து வந்தார்கள். அவர்கள் வீரத்துக்கு அடையாளமாய் விளங்கியது விற்கொடி; பனம்பூ மாலை அவர்களுக்கு உரியது.

5. கீழ்க் கடற்கரையை அடுத்துள்ள சில நிலப் பகுதிகளும், தஞ்சை, திருச்சி என்னும் மாவட்டங்களும் அடங்கியது சோழ நாடு. சோழ நாடு காவிரி நதி பாய்வதால் செழிப்புக் குன்றாத வளநாடாகும். ஆகையால்தான், "சோழ வளநாடு சோறுடைத்து," என்று ஔவையார் பாடினர். சோழ மன்னர்கள் வீரத்தில் சிறந்தவர்கள் என்பதை அவர்களுக்குரிய புலிக் கொடியினல் அறியலாம். அவர்களுக்குரிய மாலை ஆத்தி மாலை. சோழர்கள் உறையூர், காவிரிப்பூம் பட்டினம் என்னும் நகரங்களைத் தலை நகரங்களாகக் கொண்டு ஆண்டு வந்தனர். சோழர்களுள் முதல் அரசன் என்று சிறப்பிக்கப்படுபவன் கரிகால் வளவன் என்பவன். அவன் காலத்திலேதான், முதல் முதல் காவிரிக்கு அணை கட்டப்பட்டது. காவிரிப்பூம்பட்டினம் இப்பொழுது சிறு கிராமமாய் விளங்குகிறது.

6. பிற்காலத்துச் சோழர்கள் தஞ்சை, திருவாரூர் என்னும் நகரங்களைத் தலைநகர்களாகக் கொண்டு ஆண்டு வந்தார்கள். பிற்காலத்துச் சோழர்களுள் சிறந்தவன், இராச ராசன். அவன் போரில் பல மன்னர்களை வெற்றி கொண்டவன்; கடவுள் பத்தி உடையவன். அவன் தஞ்சையில் **பிரகதீச்சுரர் ஆலயம்** என்னும் கோயிலைக் கட்டினான்.

7. சோழ நாட்டிற்குத் தென்பகுதியும் அதன் கீழக் கடற்கரையை அடுத்துள்ள பகுதிகளும் பாண்டி நாடு எனப்படும். இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களும், பாண்டி நாட்டைச் சேர்ந்தவை. வைகை, தாமிரவர்ணி என்னும் நதிகள் பாண்டி நாட்டைச் செழிப்புறச் செய்கின்றன. பாண்டிய மன்னர்கள் வீரத்திலும், நியாயத்திலும், கல்வியிலும் சிறந்தவர்கள்.

8. பாண்டிய மன்னர்கள் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து வந்தார்கள்; மூன்று முறை தமிழ்ச் சங்கங்களை ஏற்படுத்தித் தமிழ் மொழியை வளர்த்தார்கள்; பல அறப்பணிகளையும் அவர்கள் செய்துள்ளார்கள். மதுரையில் உள்ள உன்னதமான **மீனாட்சி அம்மன் கோயில்**, அவர்களால் கட்டப்பட்டது. அவர்களுக்கு மீனக்கொடி உரியது. அவர்கள் மாலை வேப்பம்பூ மாலை. '**கொற்கை**' என்பது அவர்கள் துறைமுகப்பட்டினம். அங்கு முற்காலத்தில் ஏராளமாக முத்துக் குளித்தல் நடைபெற்றது. அங்கு எடுக்கப்பட்ட முத்துக்களை மேனாடுகளுக்கும், சீனம், பர்மா முதலிய கீழ் நாடுகளுக்கும் கப்பல் மூலம் கொண்டு சென்று, வியாபாரம் செய்தார்கள். இதனாலேதான் "பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து," என்று ஔவையார் பாடினார்.

9. தமிழ் நாடு முப்புறமும் கடலால் சூழப்பட்டுள்ளதால் கடல் வளம் வாய்ந்தது. ஆகையால், தமிழர்கள் கப்பல் கட்டிப் பல அயல் நாடுகளுக்குச் சென்று, தங்கள் நாட்டுப் பொருள்களை வியாபாரம் செய்து வந்தார்கள். தமிழ் நாடு மலை வளம் மிகுந்துள்ள இயற்கைக் காடுகளையும் தன்னிடம் கொண்டுள்ளதால் மலைபடு பொருள்களையும் ஏராளமாகப் பெற்றுள்ளது. உயர்சாதி மரங்கள், வாசனைப் பொருள்கள், கனி வகைகள், யானைத் தந்தங்கள், தேன், தினை அரிசி முதலியவை மலை நாட்டிலிருந்து கிடைக்கும் பொருள்கள். காவிரி போன்ற பல நதிகள் தமிழ் நாட்டின் மருத நிலங்களைச் செழிப்புறச் செய்து, வளத்தைப் பெருக்குகின்றன.

10. தமிழர்கள் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னமே நாகரிகம், கலை, தொழில், வாணிபம், ஆட்சிமுறை இவைகளில் முன்னேற்றம் அடைந்திருந்தார்கள். பல இலக்கிய இலக்கண நூல்களை இயற்றியிருந்தார்கள். உலகில் உள்ள பழமையான நாகரிகம் அடைந்த நாடுகளுள் நம் தமிழ் நாடும் ஒன்று.

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| தனித்தனி | நிலப்பரப்பு | பண்டைக் காலம் |
| சேரர் | சோழர் | பாண்டியர் |
| பெருமன்னர்கள் | ஆட்சி | குறுநில மன்னர் |
| தென்னிந்தியா | மாவட்டம் | வஞ்சி மாநகர் |
| விற்போர் | முசிறி | தொண்டி |
| அன்பாட்சி | குன்று | வளநாடு |
| பட்டினம் | வளவன் | சங்கங்கள் |
| ஆதரித்து | இயற்கை | திரவியம் |
| இலக்கியம் | மருதநிலம் | வாணிபம் |

## பயிற்சி :

I. (i) தனித்தனி, முதன்முதல், படிப்படி—அடுக்குத் தொடர்களை அமைத்து வாக்கியங்கள் எழுது.

(ii) கீழ் வரும் சொற்றொடர்களைப் பிரித்துக்காட்டு : நிலப்பரப்பு, தென்னிந்தியா, விற்கொடி.

II. (i) முருகன் வந்தான்—இரண்டு சொற்கள் சேர்ந்து கருத்து முற்றுப் பெற்றதால் இது முற்றுச் சொற்றொடர் அல்லது வாக்கியம் எனப்படும்.

2. வந்த முருகன், முருகன் வந்து — என்ற சொற்றொடர்களைக் கவனி. கருத்து முற்றுப் பெறவில்லை. ஆகையால், இவை எச்சச் சொற்றொடர் எனப்படும்.

3. இப்பாடத்தில் வந்துள்ள முற்றுச் சொற்றொடர்களையும் எச்சச் சொற்றொடர்களையும் எடுத்து எழுது.

## கேள்விகள் :

1. தமிழ் நாட்டின் எல்லைகள் எவை ?
2. தமிழ் நாடு எத்தனை பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது ?
3. சேரநாடு எங்குள்ளது ?
4. சோழநாட்டைச் சேர்ந்த மாவட்டங்கள் எவை ?
5. சேரநாட்டைச் சேர்ந்த துறைமுகப்பட்டினங்கள் எவை ?
6. கொற்கை எந்நாட்டுத் துறைமுகப்பட்டினம் ?
7. மலை நாட்டுப் பொருள்கள் எவை ?
8. பாண்டி நாட்டினின்று எவை ஏற்றுமதி செய்யப்பட்டன ?

9. சேரர், சோழர், பாண்டியர்—இவர்க்குரிய மாலையும் கொடியும் எவை?

10. தமிழர் நாகரிகம் எவற்றால் விளங்குகிறது?

---

## 2. சில பயிர் வகைகள்

1. உலகில் உள்ள மக்களுக்கு உணவு முக்கியமானது. உணவின்றி யாரும் உயிர் வாழ முடியாது. ஆதிகால மக்கள் பெருங்காடுகளில் உணவுக்காகத் திரிந்து அலைந்து, வேட்டையாடி வந்தார்கள். பின்னர் அவர்கள் காடுகளை வெட்டி, நிலங்களைப் பண்படுத்திப் பயிரிடக் கற்றுக்கொண்டார்கள். நாகரிகம் வளர வளர, அவர்கள் வீடுகள் கட்டி வசிக்கவும், ஆடைகள் நெய்யவும், பல தொழில்கள் புரியவும் வல்லவர்களானார்கள். உலகில் தோன்றிய தொழில்களுள் முதன்மையானது பயிர்த்தொழிலேயாகும். தென்னிந்தியாவில் நெல், கம்பு, சோளம், கேழ்வரகு, நிலக்கடலை, கரும்பு முதலியன ஏராளமாகப் பயிரிடப்படுகின்றன.

2. நெல் நன்செய் நிலத்தில் பயிரிடப்படும். கோடை மழையில் நிலத்தை நன்கு உழுது ஆற வைப்பார்கள். மழைக்காலம் தொடங்கியதும் நிலத்திற்கு உரமிட்டு, மீண்டும் உழுவார்கள். பின்பு நிலத்தைப் பரம்படித்து, சமன்செய்வார்கள். நாற்றுக்களை இரண்டு அங்குல உயரம் தண்ணீர் தேங்கியுள்ள நிலத்தில் நான்கு அங்குலத்திற்கு ஒன்று வீதம் நடுவார்கள். அப்பொழுது நாற்று ஓரடி உயரம் வளர்ந்திருக்கும். பின்பு அடிக்கடி நீரைப்பாய்ச்சி, ஈரம் புலராமல் கவனித்துக்கொள்வார்கள். சில தினங்களில் பயிருடன் சில களை-




களும் வளரும். அவை பயிர்ச்சத்தை உண்டு- விடும். ஆகையால், அக்களைகளைப் பிடுங்கி எறிவார்- கள். நெற்பயிர் நான்கடி உயரம் வரை வளரும். அதன் தண்டு குழல் போன்று இருக்கும்; அது கதிர் விடும். கதிரில் உள்ள நெல் முற்றியதும் பயிர் தலை சாய்ந்து நிலத்தில் படிந்திருக்கும். உழவர்கள் பயிரை அறுவடை செய்து, கட்டாகக் கட்டிக் களத்தில் சேர்ப்பார்கள். பின்பு போரடித்து நெல் மணிகளைப் பிரிப்பார்கள். நெல்லை மூட்டையாகக் கட்டி வண்டியில் ஏற்றிச் செல்வார்கள்.

3. கம்பு புன்செய்ப்பயிர். தென்னிந்தியாவில் இது ஏராளமாகப் பயிரிடப்படுகிறது. இது ஆடி, ஆவணி மாதங்களில் பயரிடப்படுகிறது. கம்பை விதைத்த பின் மீண்டும் நிலத்தை உழுவார்கள். அப்பொழுதுதான் விதை மண்ணில் புதையும். கம்புக்குச் சிறிது தண்ணீர் பாய்ச்சுவதே போதும். பருவகாலமழையே இதற்குப் போதுமானது. கம்பங்கதிர்கள் தாள்களின் உச்சியில் கொத்தாய் இருக்கும். கதிர் முற்றியதும் கதிரை மாத்திரம் அறுத்து எடுப்பார்கள். கதிர்களைக் களத்தில் குவித்து, மாடுகளைக் கொண்டு மிதிக்க வைப்பார்கள். பின்பு தானியத்தை மூட்டையாகக் கட்டுவார்கள்.

4. சோளம் புன்செய்ப்பயிர்களில் சிறந்தது. கரிசல், செம்மண் நிலங்களில் இது வளரும். இது மாசி, சித்திரை மாதங்களில் விதைக்கப்படும். இதற்கு மழை அதிகம் தேவையில்லை. சோளத்தில் பலவகை உண்டு. சோளத்தை அடர்த்தியாகப் பயிரிடலாம். சோளத்தட்டு மாடுகளுக்கு நல்ல தீனியாகும்.

5. கேழ்வரகு ஏழை மக்களுக்குச் சிறந்த உணவுப் பொருள். இதுவும் புன்செய்ப் பயிரே. இது வயல்களிலும் தோட்டங்களிலும் பயிரிடப்படும். ஆடி, ஆவணி, புரட்டாசி மாதங்களில் இதைப் பயிரிடுவார்கள். நெற்பயிரைப் போலவே இதற்கும் முதலில் நிலத்தை உழுது, பாத்தி கட்டி, விதை விதைத்து, நாற்று விடுவார்கள். முப்பது அல்லது முப்பத்தைந்து நாட்கள் கழிந்ததும், நாற்றைப் பிடுங்கி நடுவார்கள். இதற்கு நீரும் உரமும் வேண்டும். ஒரு மாதம் கழித்துக் களை எடுப்பார்கள். மூன்று

மாதம் கழிந்ததும், அறுவடை செய்வார்கள். நெல்லைக்காட்டிலும் கேழ்வரகில் சத்துப்பொருள் அதிகம் உண்டு.

6. நிலக்கடலை புன்செய் நிலங்களில் பயிராகும். நிலத்தை இரண்டு மூன்று முறை உழுது உரமிட்டுப் பண்படுத்துவார்கள். ஆடி, ஆவணி மாதங்களில் விதை விதைப்பார்கள். நிலக்கடலைச் செடி தரையில் படர்ந்து வளரும். இதன் தண்டுப், இலைகளும், பூக்களும் நிலத்தின் வெளியே தோன்றும். இலைகள் பழுத்தவுடன் வேரின் அடிப் பாகத்தில் உள்ள காய்கள் முற்றிவிடும். அப்பொழுது நிலத்தைக் கொத்தி நிலக்கடலையை எடுப்பார்கள். நிலக்கடலையை அனைவரும் விரும்பி உண்பர். இதன் பருப்பைச் செக்கிலிட்டு ஆட்டி, கடலை நெய் தயாரிப்பார்கள். கடலை நெய் உணவுப் பொருள் தயாரிக்கவும், சோப்புச் செய்யவும் உபயோகமாகும். நிலக்கடலைப் பிண்ணாக்கு நெற்பயிருக்குச் சிறந்த எருவாகும்.

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| முக்கியம் | உணவின்றி | ஆதி காலம் |
| பண்படுத்தி | நாகரிகம் | ஆடைகள் |
| நாற்றுக்கள் | புலராமல் | அறுவடை |
| கதிர் | களத்தில் | குவித்து |
| சோளத்தட்டு | உரம் | செக்கு |
| கொத்தி | சத்துப்பொருள் | சோப்பு |
| எண்ணெய் | பரம்பு | கடலை நெய் |

பயிற்சி :

I. கீழ் வரும் சொற்களின் பொருள் வேறுபாட்டைக் கவனி :—

கலை - வித்தை — களை - பகைப்பயிர்
வலை - கண்ணி — வளை - எலி வளை
தலை - உறுப்பு — தளை - கட்டு
புல் - பசும்புல் — புள் - பறவை
கல் - கல்லு — கள் - மது

II. பசு வந்தது, வந்த பசு, பசு வந்து — இம்மூன்று சொற்றொடரையும் நன்கு கவனி. எந்தச் சொற்றொடர் கருத்து முற்றுப் பெற்றுள்ளது என்பதையும் கவனி. முதல் சொற்றொடர்தான் கருத்து முற்றுப் பெற்றுள்ளது. மற்றைய இரண்டும் எச்சமாகவே (குறைபாடாய்) உள்ளன.

சொற்கள் சேர்ந்து கருத்து முற்றுப் பெறுவதே முற்றுச் சொற்றொடர் அல்லது வாக்கியம் எனப்படும். கருத்து முற்றுப் பெறாத சொற்றொடர்கள் எச்சச் சொற்றொடர் எனப்படும்.

கீழ் வரும் சொற்றொடர்களின் பெயரைக் குறிப்பிடு :—

(1) சென்ற முருகன்....
(2) முருகன் சென்றான்.
(3) முருகன் சென்று....

கேள்விகள் :

1. தென்னிந்தியாவின் பயிர் வகைகள் எவை?
2. நெல் பயிரிடும் முறை யாது?

3. களை பிடுங்குவது ஏன்?
4. கம்பு எம்மாதங்களில் பயிரிடப்படும்?
5. கம்பை எவ்விதம் அறுவடை செய்வார்கள்?
6. புன்செய்ப் பயிர்கள் எவை?
7. சோளத்தட்டு எதற்குப் பயன்படும்?
8. "கேழ்வரகு உணவு சிறந்தது."—ஏன்?
9. நிலக்கடலையை எவ்விதம் அறுவடை செய்வார்கள்?
10. அதன் உபயோகங்கள் யாவை?

---

# 3. சர் ஜகதீச சந்திர போஸ்

1. நம் நாட்டில் வங்காள மாகாணத்தில், ஒரு சிறிய கிராமத்தில், 1858-ஆம் ஆண்டு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு ஜகதீச **சந்திர போஸ்** என்று பெயரிடப்பட்டது. ஜகதீச சந்திரரின் தாய் தந்தையர் அவரை அன்புடன் வளர்த்தனர்.

2. இளமையிலேயே ஜகதீச சந்திரர் எப்பொருளையும் கூர்ந்து பார்த்து ஆழ்ந்து சிந்திப்பார். கிராமத்தில் வயல் வழியாகத் தம் தந்தையாருடன் செல்வார்; செல்லும் போது பல பொருள்களையும் கவனிப்பார்; தம் தகப்பனாரிடம் சந்தேகங்களைக் கேட்டறிவார். அவர் அறிவைக் கண்ட தந்தையாரும் தகுந்தபடி பதில் அளிப்பார்.

3. ஜகதீச சந்திரர் தம் ஊரிலேயே ஆரம்பப் படிப்பைப் படித்து முடித்தார்; பிறகு கல்கத்தாவுக்குச் சென்று உயர்தரக் கல்வி கற்றார்; **பி. ஏ.** பட்டமும் பெற்றார். அவர் கல்லூரியில் இருக்கும் பொழுது தாவரங்களின் மீது அதிக கவனம்



செலுத்தினர். அவரது புத்தி நுட்பத்தைக் கண்ட அவர் தகப்பனர் அவரை இங்கிலாந்திற்கு அனுப்பினர். அவரை இங்கிலாந்திற்கு அனுப்பத் தாய் தந்தையர் பட்ட கஷ்டம் இவ்வளவு அவ்வளவு அன்று. அவர்கள் ஏராளமாகக் கடன் வாங்கினதுமல்லாமல், நகைகளையும் விற்றுப் பிள்ளைக்கு உதவினர்கள்.

4. ஜகதீச சந்திரர், 1885-ஆம் ஆண்டு பி. எஸ்ஸி. பட்டம் பெற்று, விஞ்ஞானத்தில் சிறப்புற்று விளங்கினர்; இங்கிலாந்தில் தம் படிப்பு முடிந்ததும் இந்தியாவிற்குத் திரும்பினர்; உடனே தம் விருப்பப்படி கல்கத்தா மாகாணக் கல்லூரியில்

பௌதிகப் பேராசிரியரானார். ஆனால், ஐரோப்பியப் பேராசிரியர்களுக்குக் கொடுக்கும் ஊதியம் கொடுக்கப்படவில்லை. அதனால், அவர் பிடிவாதமாகத் தம் ஊதியத்தை வாங்க மறுத்துப் பல துன்பங்களுக்கும் ஆளாயினார். கடைசியில் அவ்வூதியமே கொடுக்கப்பட்டது. அவர் தமக்கு வந்த நிலுவை ஊதியத் தொகையைத் தம் தந்தையாரிடம் கொடுத்துக் கடன்களைத் தீர்த்து வரும்படி செய்தார்.

5. ஜகதீச சந்திரர் இயற்கைத் தத்துவ ஆராய்ச்சிகள் பல செய்து, பத்திரிகைகள் வாயிலாக வெளியிட்டார். மின்சார அலைகளைப் பற்றி அவர் ஆராய்ந்து வெளியிட்ட கட்டுரை ஒன்று உலகினர் கவனத்தைக் கவர்ந்தது. வங்காள அரசியலாரும் ஆராய்ச்சி செய்ய அவருக்குப் பண உதவி செய்யலாயினர்.

6. ஜகதீச சந்திரர் முக்கியமான ஆராய்ச்சி ஒன்றை வெளியிட்டார். தாவரங்களும் மனிதர்களைப் போலவே உணர்ச்சியுடையவை என்பதைப் பலர் முன்னிலையில் விளக்கிக் காட்டினார். முதலில் மேல் நாட்டு விஞ்ஞானிகள், அவர் ஆராய்ச்சியை ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால், அவர் தம் விடாமுயற்சினால், புதிய கருவியின் மூலம் தாவரங்களின் உள் இயக்க உணர்ச்சிகளை விளக்கிக் காட்டினார். அதனால் அவர் புகழ் எங்கும் பரவியது. 1917-ஆம் ஆண்டில் அவருக்கு இந்திய அரசாங்கம் 'சர்' என்னும் பட்டம் வழங்கியது.

7. ஜகதீச சந்திரர் தாம் சம்பாதித்த பொருளாலும், பிறர் அளித்த நன்கொடையினாலும் கல்கத்தாவில் விஞ்ஞான ஆராய்ச்சி நிலையத்தை ஏற்படுத்தினார். 1920-ஆம் ஆண்டு, அவர் இராயல் சொசைட்டி

யின் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். அது உலக விஞ்ஞானிகளுக்கு அளிக்கும் ஒப்புயர்வற்ற ஸ்தானமாகும்.

8. 1937-ஆம் ஆண்டு, தம் எழுபத்து ஒன்பதாம் ஆண்டில், சர் ஜகதீச சந்திரர் இம்மண்ணுலகத்தை நீத்து விண்ணுலகை அடைந்தார். அவர் புகழ், நம் நாட்டில் என்றும் நிலவுமல்லவா ?

புதிய சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| வங்காளம் | மாகாணம் | ஆழ்ந்து | சிந்திப்பார் |
| சம்பந்தம் | சந்தேகம் | உயர்தரக் கல்வி | கல்லூரி |
| பௌதிகம் | நுட்பம் | இங்கிலாந்து | தீர்மானித்தார் |
| பேராசிரியர் | ஊதியம் | ஆளாயினர் | தத்துவம் |
| மின்சாரம் | கட்டுரை | தாவரம் | உணர்ச்சி |
| ஆராய்ச்சி | விஞ்ஞானம் | சொசைட்டி | அங்கத்தினர் |

பயிற்சி :

I. (1) கீழ் வரும் சொற்களைச் சொந்த வாக்கியங்களில் அமை :—

சம்பந்தம், ஊதியம், ஆராய்ச்சி

(2) முதல் பத்தியில் உள்ள வாக்கியங்களில் உள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களைக் குறிப்பிடு.

(3) எதிர் மொழி கூறு :—இயற்கை, கிராமம், நுட்பம்.

II. (1) பசு வந்தது — இதில் வந்தது என்பது வினை முற்று.

(2) வந்த பசு சென்றது.—இதில் 'வந்த' என்பது வினையாயிருந்தாலும், பொருள் முற்றுப்

பெறவில்லை. ஆகவே, அது எச்ச வினை-யாகும். எச்சவினை பெயரைக் கொண்டு முடிந்தால் பெயர் எச்சம் எனப்படும்.

(3) பசு வந்து சென்றது — இதில் 'வந்து' என்ற எச்சவினை 'சென்றது' என்ற வினை முற்றைக் கொண்டு முடிவதால் வினை எச்சம் எனப்படும்.

III. (1) கீழ் வரும் வாக்கியங்களில் உள்ள பெயரெச்-சங்களைக் கண்டு பிடி :—

இராமன் வந்த நண்பனோடு சென்றான்.
முருகன் சென்ற வழி எது?
நான் கண்ட காட்சி அற்புதமானது!

(2) கீழ் வரும் வாக்கியங்களிலுள்ள வினை எச்சங்-களைக் கண்டு பிடி :—

இராமன் வந்து பார்த்தான்.
முருகன் ஓடிப் போனான்.
நான் கண்டு பிடித்தேன்.

கேள்விகள் :

1. ஜகதீச சந்திரர் எங்கு எப்போது பிறந்தார்?
2. அவர் தந்தையார் அவரை எங்கு எதற்காக அனுப்-பினார்?
3. ஜகதீச சந்திரர் இங்கிலாந்திலிருந்து வந்ததும் எங்குப் பணியாற்றினார்?
4. அவர் தந்தையார் பட்ட கடனை எவ்விதம் போக்கி-னார்?
5. ஜகதீச சந்திரர் எதை விளக்கிக் காட்டினார்?
6. அவர் எதனை ஏற்படுத்தினார்?
7. அவர் எதன் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார்?

---

# 4. விஞ்ஞான அற்புதங்கள்

1. கடவுள் படைத்த இயற்கைப் பொருள்களின் துணையாலும் தம் நுண்ணறிவின் திறத்தாலும் பல அற்புதங்களைக் கண்டு பிடித்தவர்களே விஞ்ஞானிகள். கடந்த நூற்றாண்டில் மேல் நாட்டில் விஞ்ஞான அற்புதங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன. விஞ்ஞான அற்புதங்கள் மக்களுக்குப் பல வகைகளில் நன்மை புரிகின்றன. ஒவ்வொரு விஞ்ஞானியரும் ஒவ்வோர் அற்புதச் செயலைக் கண்டு பிடிப்பதற்கு எத்தனையோ ஆண்டுகளைச் செலவழித்தனர். சிலர் அவ்வாறு செலவழித்தும்,



முழுப்பயனை அடையாமல், தம் கருத்துக்களைப் புத்தக வாயிலாக வெளியிட்டுச் சென்றனர். அவற்றின் துணைகொண்டு அவர்களுக்குப் பின் வந்த அறிஞர்கள் சில அற்புதங்களைத் தொடர்ந்து கண்டு

பிடித்தார்கள். இப்படியே விஞ்ஞான அற்புதங்கள் வழிவழித் தோன்றி வளரலாயின; இன்றும் வளர்ந்துகொண்டே வருகின்றன; இனியும் வளரும் என்பதில் ஐயம் இல்லை.

2. மின்சாரம் ஓர் அற்புதச் சத்தி அல்லவா? அதன் துணைகொண்டு எண்ணற்ற அற்புதங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அவை மின்சார விளக்கு, மின்சார விசிறி, மின்சார இரயில் வண்டி, தந்தி, கம்பியில்லாத் தந்தி, ரேடியோ, பேசும் படக்காட்சி முதலியனவாகும்.

3. நாம் மின்சாரப் பொத்தானை அழுத்தியதும் விளக்கு எரிகிறது. மின்சார விளக்கு காற்றில் அணையாது; நல்ல வெளிச்சத்தைக் கொடுக்கும். அது போல, மின்சார விசிறியும் வெப்பத்தைப் போக்கி நல்ல காற்றை நமக்கு ஓயாது கொடுக்கிறது. பிரயாணத்திற்கு மிகுந்த சௌகரியம் அளிப்பது மின்சார இரயில் வண்டிதான். அது வெகு சீக்கிரத்தில் குறித்த இடத்துக்கு நம்மைக் கொண்டு செல்கிறது. தந்தியின் மூலம் உலகில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செய்தியை அனுப்பலாம். ரேடியோ மூலம் பல வேறு நாடுகளில் நடைபெறும் பேச்சு, இன்னிசை முதலியவற்றை இருந்த இடத்திலிருந்தே நாம் கேட்கலாம். கம்பியில்லாத் தந்தி, ரேடியோ இவற்றின் தத்துவங்களைக் கண்டுபிடித்தவர் 'மார்க்கோனி' என்னும் விஞ்ஞானியாராவர். நடுக்கடலில் செல்லும் கப்பலுக்கு ஆபத்து நேர்ந்தால், கம்பியில்லாத் தந்தியின் மூலம் அருகில் உள்ள ஊருக்குத் தெரிவித்து உதவி பெறலாம். பேசும் படக்காட்சியினுல் பல நாட்டுப் படங்களைக் கண்டு இன்புறலாம்.

4. மக்கள் பண்டை நாட்களில் மாட்டு வண்டிகளில் பிரயாணம் செய்து வந்தார்கள். பின்பு புகைவண்டி தோன்றிற்று. கடலைக் கடக்கப் பாய் மரக் கப்பலைக் கட்டினர். இப்போதோ, நீராவிக் கப்பல் ஏற்படுத்தப்பட்டு அதில் பல சௌகரியங்கள் அமைந்துள்ளன. ஆபத்து அதிகம் இல்லை. இப்பொழுது வானிலும் பறந்து செல்ல வசதிகள் ஏற்பட்டுள்ளன. இப்பொழுது நாம் உலகத்தில் எந்த இடத்திற்குச் செல்ல வேண்டுமானாலும் விரைந்து செல்லலாம். விமானத்தில் மக்கள் நெடும்பிரயாணம் செய்கிறார்கள்; தபால்களும் விரைவில் கொண்டு செல்லப்படுகின்றன. யுத்த காலங்களில் வான விமானம் மிகவும் உபயோகப்படுகிறது. நட்புத் தேசங்களுக்கு யுத்த காலத்தில் உணவுப் பொருள்களை விமானமூலம் அனுப்பலாம்.

5. சமீப காலத்தில் அமெரிக்க விஞ்ஞானிகள் புதுமையாக அணுக்குண்டு என்ற பெருஞ்சக்தியைக் கண்டு பிடித்தார்கள். அது பெரும்பாலும் அழிவு வேலைக்கே பயன்படுகிறது. அது ஒரு பெரிய நகரத்தை ஒரு நொடியில் சாம்பலாக்கிவிடும். அச்சு நாடுகளுக்கும், நேச நாடுகளுக்கும் நடந்த இரண்டாவது உலகப்போரில் அணுக்குண்டு, ஜப்பான்மீது வீசப்பட்டது. அதன் பயனாக உலகில் சமாதானம் ஏற்பட்டது. சமீபத்தில் அணுச்சத்தியை மக்கள் நன்மைக்காகப் பயன்படுத்தும் வழிகளைக் கண்டு பிடித்துக் கையாண்டு வருகின்றனர். அணுக்குண்டு உபயோகிக்கப்படாதபடி சர்வதேச மகாநாடுகளில் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. நம் நேருஜி உலக சமாதானம் ஏற்படுத்த மிகவும் பாடு பட்டு வருகிறார்.

6. நம் நாட்டிலும் உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானியர் சிலர் தோன்றினர். சர். ஜகதீச சந்திர போஸ், சர். பி. ஸி. ரே, சர். சி. வி. இராமன் என்பவர் சிறந்த விஞ்ஞானியர். போஸ் தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்பதை மேனுடுகளில் உள்ள கலைஞர்கள் முன் விளக்கிக் காட்டினர். ரே என்பவர், இரசாயன சாஸ்திரத்தில் சில புதிய முறைகளைக் கண்டுபிடித்தார். இராமன் ஒலி, ஒளி என்பவற்றின் உண்மைத் தத்துவங்களைக் கண்டுபிடித்து, உலகத்திற்கு அறிவித்துப் பெரும்புகழ் பெற்ருர். இம்மூவரும் ‘நோபேல் பரிசு’ பெற்றவர்.

7. விஞ்ஞானத்தால் பல நன்மைகள் தோன்றின போதிலும், சில தீமைகளும் தோன்ருமல் இல்லை. சில விஞ்ஞான சாதனங்கள் யுத்தகாலத்தில் உலகிற்குப் பேரழிவை உண்டாக்குகின்றன. கடற்கண்ணி, வெடிகுண்டு விமானங்கள், அணுக்குண்டு போன்ற சத்திகளால் தீமையே விளைகின்றன. விஞ்ஞான அற்புதங்களால் தீமையை நீக்கி, நன்மையை அடைய மக்கள் பாடுபட வேண்டும். உலகநாடுகள், வல்லரசுகள் அனைத்தும் ஒற்றுமைக்காகப் பாடுபட வேண்டும். பெருஞ்சத்திகளை நல்வழிக்கே பயன்படுத்த வேண்டும். உலகத்தார் அனைவரும், ஒரே கடவுளின் புதல்வர் என்ற சீரிய கருத்தைக் கொள்ள வேண்டும்.

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| நுண்ணறிவு | அற்புதம் | விஞ்ஞானிகள் |
| முழுப்பயன் | தொடர்ந்து | எண்ணற்ற |
| ரேடியோ | படக் காட்சி | விசிறி |
| வெப்பம் | மார்க்கோனி | தத்துவங்கள் |

| | | |
|---|---|---|
| பண்டை நாள் | பாய்மரக் கப்பல் | நீராவி |
| சௌகரியம் | நேசநாடு | அணுக்குண்டு |
| பெரும்பாலும் | புதுமையாக | கையாண்டு |
| சர்வதேசம் | மகாநாடு | இரசாயனசாத்திரம் |
| சாதனங்கள் | யுத்த காலம் | வல்லரசுகள் |
| கடற்கண்ணி | உலக நாடுகள் | சீரிய |

பயிற்சிகள் :

I (1) கீழ் வரும் சொற்களைச் சொந்த வாக்கியத்தில் அமை :—
எண்ணற்ற, பண்டை நாள், பெரும்பாலும், சாதனங்கள்.

(2) எதிர் மொழி கூறு :—
இயற்கை × ————
தோன்றி × ————
நன்மை × ————
அருகு × ————

II பல வாக்கியங்கள் சேர்ந்தது ஒரு பாரா அல்லது பத்தி எனப்படும். பல பத்திகள் கொண்டது ஒரு பாடம். இப்பாடத்தில் எத்தனை பத்திகள் உள்ளன ? முதல் மூன்று பத்திகளைப் படித்து அவைகளுக்கேற்ற தலைப்புக்களை நீயே கொடு.

II (1) தகப்பனார் நேற்று ஊரிலிருந்து வந்தார் :— இது ஒரு வாக்கியம். இதன் முடிவில் (.) முற்றுப் புள்ளி யிடவேண்டும். படிக்கும்போதும் இக்-குறியுள்ளவிடத்தில் நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

(2) தகப்பனார் ஊரிலிருந்து வந்து, தம் நண்பர் ஒருவரைப் பார்க்கச் சென்றார்.

அவர் வரும் போது, பல துணி மணிகளையும், பட்சணங்களையும், விளையாட்டுச் சாமான்களையும் வாங்கி வந்தார்.

இராமனும், முருகனும், கந்தனும் பள்ளிக்கு வரவில்லை.

இவ்வாக்கியங்களின் இடையில் (,) காற்புள்ளி அமைக்கப்பட்டுள்ளதைக் கவனி. வாக்கியங்களில் கருத்து நன்கு விளங்க இக்குறி தகுந்த இடங்களில் இடப்படும். இது எச்சங்களை அடுத்தும், உம்மைகளை அடுத்தும் இடப்படும்.

(3) கீழ்வரும் வாக்கியங்களில் ஏற்ற இடத்தில் காற்புள்ளி அமை:—

1. மின்சாரத்தின் உதவியால் ரேடியோ தந்தி படக்காட்சி முதலியன தோன்றின.
2. ரேடியோமூலம் இசை உலகச்செய்தி முதலியன கேட்கலாம்.

கேள்விகள் :

1. விஞ்ஞான அற்புதங்கள் எப்படி வளரலாயின?
2. மின்சாரத்தினால் தோன்றிய நன்மைகள் யாவை?
3. ரேடியோவினால் உண்டாகும் நன்மைகள் யாவை?
4. மார்க்கோனி எதைக் கண்டு பிடித்தார்?
5. விஞ்ஞானத்தால் தோன்றிய போக்குவரவு சாதனங்கள் எவை?
6. ஆகாயவிமானத்தால் ஏற்படும் பயன்கள் யாவை?
7. அணுக்குண்டு யாரால் கண்டு பிடிக்கப்பட்டது? அதனால் விளையும் தீமை யாது?
8 நம் நாட்டு விஞ்ஞானியர் யாவர்?
9. அவர்களால் கண்டு பிடிக்கப்பட்ட அற்புதங்கள் யாவை?
10. உலக வல்லரசுகள் எத்தகைய கருத்தைக் கொள்ள வேண்டும்?

---

## 5. ஆகாய விமானம்

கப்பல் என்றுமே—மெல்லக்
கடலில் நீந்துவதாம் ;
தப்பித் தப்பியே—ரயிலும்
தரையில் ஊருவதாம். 1

வான மீதெழுவேன்—அங்கே
வட்டம் சுற்றிடுவேன் ;
கானம் மலையெல்லாம்—யான்ஓர்
கணத்தில் தாண்டிடுவேன். 2

இடைவி டாதுதபால்—உலகில்
எங்கும் கொண்டுசெல்வேன் ;
சடைவி லாமலே—பலரைத்
தாங்கி யும்போவேன். 3

நன்மை செய்யவந்தேன்—அதை
நன்கு ணராமல்,
வன்மைப் போரில்எனை—இழுத்து
மாட்டி விட்டார்ஐயோ ! 4

தீவினை செய்ய—என்னைத்
தினமும் ஏவுகிறார் ;
பூவுல கம்மெல்லாம்—சுட்டுப்
பொசுக்கச் சொல்லுகிறார். 5

அன்பைக் கொன்றுவிட்டார்—மனிதர்
அரக்கர் ஆகிவிட்டார்;
துன்பம் செய்திடவே—இன்று
துணிந்தி றங்கிவிட்டார். 6

சாந்த மூர்த்தியின்—அகிம்ஸா
தருமம் மேற்கொண்டு
மாந்தர் இவ்வுலகில்—நன்றாய்
வாழ்வது எந்நாளோ ! 7

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை

## புதிய சொற்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| நீந்துவது | கானம் | வன்மை | அரக்கர் | தருமம் |
| ஊருவது | கணம் | ஏவுகிறார் | சாந்தமூர்த்தி | மாந்தர் |
| எழுவேன் | சடைவு | போசுக்க | அகிம்ஸா | எந்நாள் |

## பயிற்சி:

I. 1. கீழ் வரும் சொற்களை வாக்கியத்தில் அமை:— வட்டம், இடைவிடாமல், அகிம்ஸை, வானம், கானம்.

2. இப்பாடல்களில் உள்ள வினை முற்றுக்களை எடுத்து எழுது.

3. (1) போரில் என்னை மாட்டிவிட்டார்.

(2) மாந்தர் இவ்வுலகில் நன்றாய் வாழ்வது எந்நாளோ!

(3) தப்பித் தப்பியே ரயில் தரையில் ஊருவதாம்.

—எச்சவினைகளை எடுத்தெழுது.

II. 1. கீழ் வரும் சொற்களைப் படித்துப் பொருள் வேறுபாட்டை அறி:—

கனம் - பளு, கணம் - நிமிடம்

வன்மை - சத்தி, வண்மை - கொடுத்தல்

மனம் - நெஞ்சு, மணம் - வாசனை

ஊன் - மாமிசம், ஊண் - உணவு

2. கீழ் வரும் வினை முற்றுக்களைப் பெயர் எச்சமாக மாற்று:—

(1) வந்தாள் —

(2) சென்றாள் —

(3) உண்டாள் —

3. மேல் உள்ள வினை முற்றுக்களை வினை எச்சமாக மாற்று.

கேள்விகள் :

1. ஆகாய விமானம் தான் செய்யும் நன்மைகளை எவ்வி-தம் கூறுகிறது ?
2. ஆகாய விமானம் தன் குறைகளை எவ்விதம் உரைக்-கிறது?
3. யார் அரக்கராகிவிட்டார்? ஏன் ?
4. சாந்த மூர்த்தி யார் ? அவர் மேற்கொண்ட தருமம் என்ன ?

# 6. உல்லாசப் பிரயாணம்

## (மைசூர்)

1. நான் சென்னையில் ஐந்தாம் வகுப்பில் வாசிக்கிறேன். சென்ற வருடம் கோடைகால விடுமுறையின் போது என் அத்தையும், மாமாவும் என்னை மைசூருக்கு அழைத்துச் சென்றனர். அப்-பிரயாணத்தை நான் என்றும் மறக்க முடியாது !

2. நான் ஒரு சிறிய பெட்டியில் என் துணி-களை ஒழுங்காக மடித்து வைத்துக்கொண்டேன் ; அவற்றுடன் எனக்குத் தேவையான கண்ணடி, சீப்பு, பவுடர், சாந்து முதலியவைகளையும் வைத்துக்-கொண்டேன் ; புறப்படும் தினம் காலையில் எழுந்-திருந்து, குளித்துவிட்டு, நல்ல உடைகளைத் தரித்துக்-கொண்டேன். என் தாயார் எனக்குப் பிரியமான சிற்றுண்டியை அளித்தார். அதனை நான் உண்டு முடிந்ததும், வாயிலில் காரின் சத்தம் கேட்டது. என் அத்தையும் மாமாவும் என்னை அழைத்துப்

போக வந்தனர். நான் என் பெற்ருேரிடம் விடை பெற்று, காரில் ஏறினேன்.

3. கார் புறப்பட்டுப் பூவிருந்தவல்லிப் பெருஞ்சாலே வழியாகச் சென்றது. அதிகாலேயில் காரில் செல்வது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. எங்கள் டிரைவர் மிகவும் நல்லவர்; ஜாக்கிரதையாகக் காரை ஓட்டிச் சென்ருர். வழியில் காணும் முக்கியமான இடங்களேயும் காட்டிக்கொண்டே சென்ருர். கண்ணுக்கு எட்டிய தூரம் பசுமையான வயல்களும், ஏரி குளங்களும், மாமரங்களும் அற்புதமான காட்சியை அளித்தன. சுமார் ஒரு மணிக்கு எங்கள் கார் ஒரு முசாபரி பங்களாவிற்குச் சென்றது. அங்கு நாங்கள் சற்று நேரம் இளேப்பாறினேம்; கொண்டு வந்த உணவைப் பிரியத்துடன் உண்டோம்; சுமார் மூன்று மணிக்கு மறுபடியும் காரில் புறப்பட்டு இரவு எட்டு மணிக்குப் பெங்களூர் போய்ச் சேர்ந்தோம்.

4. பெங்களூர் ஓர் அழகிய ஊர். அங்குள்ள பாதைகளும், பூங்காக்களும் என் உள்ளத்தைக் கவர்ந்தன. அவ்வூரில் ஒரு நாள் தங்கி மறு நாள் மைசூருக்குப் புறப்பட்டோம். மைசூரை அடைவதற்குமுன் சீரங்கப்பட்டினத்தைப் பார்க்க இறங்கினேம். சீரங்கப்பட்டினத்தில் ஆற்றில் குளித்துவிட்டுக் கோட்டையைச் சுற்றிப் பார்த்தோம். அங்குள்ள அரங்கநாதப் பெருமாள் சன்னதியை அடைந்து அரங்கநாதரைத் தரிசித்தோம். பிறகு திப்புசுல்தான் வசித்துவந்த வசந்த மாளிகையைக் கண்டோம். அம்மாளிகையின் சுவரில் அக்காலத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் படங்களாக மிகுந்த அழகுடன் தீட்டப்பட்டிருந்தன. அவ்வசந்த மாளிகை-

யில் வீசும் குளிர்ந்த காற்று எங்களை அவ்விடத்தில் சிறிது நேரம் தங்கச் செய்தது. பிறகு நாங்கள் மைசூருக்குப் போய்ச் சேர்ந்தோம்.

5. மைசூரில் பல அற்புதக் காட்சிகளைக் கண்டோம். அவைகளில் என்றும் மறக்க முடியா-தது கிருஷ்ணராஜ சாகரம் அணைக்கட்டு. அந்த அணைக்-கட்டு, காவிரியாற்றின் நீரைத் தேங்கச்செய்து, மைசூர் முழுவதும் பாயச்செய்கிறது. அதை விஞ்ஞானத்தின் ஓர் அற்புதக் காட்சி என்றே சொல்லலாம். இரவில் அங்கு ஒளி வீசும் மின்சார விளக்குகளும், கூடியிருக்கும் ஜனங்களின் குதூகல-மும் மனத்திற்குக் கவர்ச்சியளிக்கும்.

6. பின்பு மைசூர் மகாராஜாவின் மாளிகை-யைப் பார்வையிட்டோம். அதைப் பார்க்குமுன் உத்தரவு பெற வேண்டும். எங்கள் மாமா சென்னை



மைசூர் அரண்மனை

யில் பிரபலமானவர். ஆகையால், அவருக்கு நல் வரவேற்புக் கிடைத்தது. மாளிகையில் பண்டைக் காலத்து அரசர்கள் போரில் சண்டையிட்ட ஆயுதங்கள் காணப்படுகின்றன; சுவர்களில் மைசூரின் சரித்திர சம்பந்தமான பல சித்திரங்கள் தீட்டப்பட்டுள்ளன. அவைகளையெல்லாம் காட்டுவதற்கும் விவரங்களைச் சொல்வதற்கும் சிலர் அமர்த்தப்பட்டிருக்கின்றனர்.

7. மைசூரிலுள்ள மிருக உயிர்க்காட்சிச் சாலை அற்புதமானது. கொடிய மிருகங்கள் யாவும் சுயேச்சையாய்த் திரிவதை அங்கே நேரில் காணலாம். கூண்டில் அடைபட்ட மிருகங்கள் அங்கு இல்லை. அவ்வுயிர்க் காட்சிச்சாலையின் அபிவிருத்தியில் மைசூர் ராஜபிரமுகர் அதிக கவனம் செலுத்துகிறார். மைசூர் அரசர்களின் குல தெய்வமான சாமுண்டேஸ்வரியின் கோயில் மலையின்மீது அற்புதமாய் அமைந்துள்ளது. அதை எவரும் பார்க்க மறத்தலாகாது.

8. இவ்வாறு பல அற்புதக் காட்சிகளைக் கண்டு நாங்கள் மைசூரில் நான்கு தினங்கள் கழித்தோம்; பிறகு சென்னைக்குத் திரும்பினேம். எனக்கு வீடு திரும்புவது வருத்தமாய்த்தான் இருந்தது. நான் மைசூரில் கண்ட காட்சிகள் என்றும் என்னால் மறக்க முடியாதவை.

சி. மீரா பாய்
(ஐந்தாம் வகுப்பு)

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| கோடை | ஒழுங்காக | சிற்றுண்டி |
| பூவிருந்தவல்லி | பெருஞ்சாலை | அதிகாலை |
| ஜாக்கிரதை | இளைப்பாறினோம் | முசாபரி |
| புங்களா | சீரங்கப்பட்டினம் | பூங்காக்கள் |
| மைசூர் | பெருமாள் | கோட்டை |
| அரங்கநாதர் | தீட்டப்பட்டு | திப்புச் சுல்தான் |
| சம்பவங்கள் | அணைக்கட்டு | அற்புதக்காட்சி |
| சாகரம் | மாளிகை | காவிரி |
| மகாராஜா | பிரமுகர் | பிரபலமான |

பயிற்சி :

I. கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய் :—

(1) மைசூரில் பல——— காட்சிகளைக் ———.

(2) அவைகளில் ——— மறக்க முடியாதது ——— ராஜசாகரம் ———.

(3) எங்கள் ——— சென்னையில் ——— பிரபலமானவர்.

II. (1) ஒரு நிகழ்ச்சியைக் கூறுவது வினை முற்று.
இராமன் ஆடினான்.
கிருஷ்ணன் ஓடுகிறான்.
சீதை பாடுவாள்.

(2) ஆடினான், ஓடுகிறான், பாடுவாள் —இவ்வினை முற்றுக்களை நன்கு கவனித்துப் பொருள் வேறுபாட்டை அறி. முதலில் உள்ளது இறந்த காலத்தையும், அடுத்தது நிகழ் காலத்தையும், மூன்றாவது எதிர் காலத்தையும் தெரிவிக்கின்-

றன. ஆடு, ஓடு, பாடு என்பன இவ்வினைகளின் பகுதிகள்.

(3) கீழ் வரும் வினை முற்றுக்களை இன்ன காலம் என்று குறிப்பிடு :—

| | |
|---|---|
| படிக்கிறான். | சிரித்தான். |
| உண்பான். | எழுதுகிறான். |
| கண்டான். | பார்ப்பார். |

### கேள்விகள் :

1. 'உல்லாசப் பிரயாணம்' என்பது என்ன?
2. பிரயாணத்திற்குமுன் தயாரிக்க வேண்டியவை என்னென்ன?
3. வழியில் கண்ட காட்சிகள் எவை?
4. பெங்களூர் எப்படிப்பட்ட நகரம்?
5. சீரங்கப்பட்டினத்தில் கண்ட சரித்திர சம்பந்தமான காட்சி யாது?
6. கிருஷ்ணராஜ சாகரத்தைக் குறித்து உனக்கு என்ன தெரியும்?
7. நீ கண்ட இரண்டு கோயில்கள் எவை?
8. நீ செய்த உல்லாசப் பிரயாணத்தை விவரித்து எழுது.

---

# 7. கூட்டுறவுச் சங்கம்

1. மக்கள் தங்கள் குடும்பச் செலவுக்காவது, விவசாயத்திற்காவது, வியாபாரத்திற்காவது கடன் வாங்குகிருர்கள். கடன் கொடுப்பவர் அதிக வட்டிக்குக் கடனைக் கொடுக்கின்றனர். கடன் வாங்குபவர் ஏதாவது ஒரு பொருளைக் கடனுக்கு ஈடாகவும் காட்ட வேண்டும். விவசாயிகள் தங்கள் நிலத்தை ஈடு வைத்து, அதிக வட்டிக்குக் கடன் வாங்கி மிகவும் துன்பப்படுகின்ருர்கள். சிலர் ஈடு காட்டிய நிலத்தைத் திருப்பி வாங்குவதற்குச் சத்தி அற்று அதனை இழந்துவிடுவதுமுண்டு. சிலர் தம் வீடு, தோட்டம், ஆபரணம் முதலியவைகளை ஈடு காட்டிக் கடன் வாங்குகின்றனர்; கடனைத் திருப்பிக் கொடுக்கும் சத்தியில்லாமல், ஈடு காட்டிய பொருளை இழந்துவிடுகின்றனர். இந்திய மக்களின் கலியாணம் முதலிய விசேஷங்களுக்குப் பணம் அதிகமாகச் செலவாகின்றது. ஆகவே, கடன் வாங்குதல் அவசியமாகிறது. சாதாரண மக்களில் பெரும்பான்மையோர், கடனில் மூழ்கித் தத்தளிக்-கின்றனர். தனிப்பட்ட முறையில் வாங்கும் கடன்-களுக்கு வட்டி அதிகம். வட்டியைக்கூடக் கொடுக்க முடியாமல் இருக்கும் மக்கள் அசலைக் கொடுப்பது எப்படி?

2. இந்த துன்பங்களை ஒருவாறு போக்க அரசாங்கத்தார் ஆங்காங்குக் கூட்டுறவு முறையில் சங்கங்களை ஏற்படுத்தி மக்களுக்கு உதவி செய்கின்-றனர். அதற்கு என்று ஓர் இலாகா அதிகாரியையும் சிப்பந்திகளையும் அரசாங்கத்தார் ஏற்படுத்தி உள்ளனர். பலர் ஒன்று சேர்ந்து கூட்டுறவுச் சங்கம் அமைக்க அதிகாரிகளுக்குத் தெரிவிக்க

வேண்டும். அப்படித் தெரிவித்தால், அரசாங்கம் அவர்களுக்கு வேண்டும் உதவியைச் செய்ய முன் வரும்.

3. கூட்டுறவுச் சங்கம் ஏற்படுத்த விரும்புவோர், ஒன்று கூடி, வேண்டும் பங்குத் தொகைகளைக் கட்டிச் சங்கத்தில் அங்கத்தினராக வேண்டும்; பின்பு தங்களுக்குள் நிருவாக உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவர்களுள் ஒருவர் தலைவராய் இருப்பர். அங்கத்தினர் கொடுக்கும் பங்குத் தொகைகளையும், அரசாங்கத்தார் உதவும் தொகைகளையும் கொண்டு அங்கத்தினர்களுக்கு வேண்டும்போது குறைந்த வட்டிக்குக் கடன் கொடுக்கப்படும். அதற்குத் தகுந்த பொருளையோ அல்லது மற்றொரு நபர் பொறுப்பையோ ஈடு காட்ட வேண்டும். கடன் தொகையைச் சிறிது சிறிதாகக் கொடுத்துவிடலாம். இதனால், ஏழை மக்களுக்குக் கடன் தொல்லைகளும் அதிக வட்டியினால் சொத்துக்களை இழக்க நேரும் துன்பங்களும் ஒழியும்.

4. வியாபாரிகள், உத்தியோகஸ்தர்கள், விவசாயிகள், தொழிலாளர்கள் முதலியோர் ஒன்று கூடி, கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்திக்கொண்டு நன்மைகளை அடையலாம். பலர் ஒன்று சேர்ந்து கூட்டுறவுச் சங்கம் மூலம் உணவுப் பொருள்கள், துணி மணி முதலியவற்றைக் குறைந்த செலவில் பெற முடியும். கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் விவசாயிகள் தங்களுக்கு வேண்டிய விதை, எரு, மாடு, கருவிகள் முதலியவற்றைச் சரசமாகப் பெற முடியும்; அன்றியும், பயிரிடும் நெல் முதலிய தானியங்களை நல்ல விலைக்கு விற்கவும் முடியும். இது போலவே உத்தியோகஸ்தர்களும் தொழிலாளி

களும் இச்சங்கத்தால் பல நன்மைகளை அடைவது கண்கூடு.

5. நம் நாட்டில் இப்போது கூட்டுறவுச்-சங்கங்களின் மூலம் பல ஸ்தாபனங்கள் நடைபெறு-கின்றன. பால் பண்ணைகள், கூட்டுறவுச் சங்கம் மூலமாக நடைபெறுகின்றன. அதனால், மக்க-ளுக்கு நல்ல பால் வசதி கிடைக்கிறது. அன்றியும், பசு வளர்ப்பவர்க்கும் இச்சங்கம் மூலம் நன்மையே அன்றித்தீமையில்லை. சில அலுவலகங்களிலும் இச்-சங்கங்கள் தோன்றியுள்ளன. பல்லாயிரக்கணக்-கான மக்கள் இச்சங்கங்களில் அங்கத்தினர்களாய் இருந்து நன்மை அடைகின்றார்கள்.

6. மேல் நாடுகளில் பெரும்பான்மையான தொழில்களும், வியாபாரங்களும் கூட்டுறவுச் சங்-கம் மூலமாகவே நடைபெறுகின்றன. அதனால், அந்நாட்டு மக்கள் செல்வத்தில் சிறந்தோங்கியுள்-ளார்கள். அவர்களிடம் பொருளாதார முட்டுப்-பாடுகள் அதிகம் இல்லை. நம் நாட்டில் இன்னும் கிராமங்களில்கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படவில்லை. கிராமமக்களின் பொருளாதார நிலை மிகத் தாழ்ந்து தான் இருக்கிறது. அந்நிலையைப் போக்குவதற்-குக்கூட்டுறவுச் சங்கங்களின் பயன்களைப் பிரசாரம் செய்வதோடு, ஆங்காங்குச் சங்கங்களைச் சரியான முறையில் ஏற்படுத்தி, நடத்தி வரவும் வேண்டும். அதற்கு மக்கள் ஒத்துழைப்பும் அரசாங்கத்தாரின் ஆதரவும் தேவை.

7. ஏழைகளின் வாழ்வையும் சுகங்களையும் பாதுகாத்து வருவதே கூட்டுறவு இயக்கத்தின் பெருநோக்கம் ஆகும். அவ்வியக்கத்தின் உறுப்பி-னராய் உள்ளவர் சுயநலமின்றி, எல்லோருடைய

நலனையும் கருதி உழைத்தல் வேண்டும். பணம் படைத்தோர், "யாம் பெற்ற பேறு இவ்வையகம் பெறுக," என்ற இலட்சியத்தோடு கூட்டுறவுச்-சங்கங்களில் தமது பொருளை இட்டுப் பிறரும் பயனடையச் செய்ய வேண்டும்.

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| அவஸ்தை | ஈடு வைத்து | வட்டி |
| விசேஷம் | அசல் | கலியாணம் |
| அதிகாரி | சிப்பந்தி | கூட்டுறவு முறை |
| இலாக்கா | பங்குத்தொகை | சங்கங்கள் |
| முட்டுப்பாடு | உத்தியோகஸ்தர் | விவசாயி |
| வையகம் | கண்கூடு | பேறு |

பயிற்சி :

I. (1) கூட்டு + உறவு = கூட்டுறவு
சிறந்து + ஓங்கி = சிறந்தோங்கி
சத்தி + இல்லாமல் = சத்தியில்லாமல்
—இவற்றை நன்கு கவனி.

(2) கீழ் வரும் சொற்றொடர்களை வாக்கியத்தில் அமை :—
கண்கூடு, ஈடு காட்டி, சிறிது சிறிதாக.

(3) இப்பாடத்தில் முதல் பத்தியில் உள்ள வினை முற்றுக்களை எடுத்து எழுதிக் காலங்களையும் குறிப்பிடு.

II. (1) உண்டான் — உண் + ட் + ஆன் — இவ்வினை முற்றில் 'உண்' என்பது வினைப்பகுதி; இது தொழிலை உணர்த்தும். ஆன் என்பது விகுதி;

இது தொழில் செய்த கருத்தா இன்ன பால் என்பதைக் காட்டுகிறது. 'ஆன்' என்பது ஆண்பால் உணர்த்தும் விகுதி. 'ட்' என்பது பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் இருப்பதால், இடை நிலை என்று பெயர் பெறும். இதனால் நாம் வினை முற்றின் காலத்தை அறிய முடிகிறது.

(2) கீழ் வரும் வினை முற்றுக்களைப் பகுதி விகுதி-களாகப் பிரித்துக் காட்டு :—

1. படித்தான் = ——— + ——— + ———.
2. செய்தான் = ——— + ——— + ———.
3. சென்றான் = ——— + ——— + ———.
4. கண்டான் = ——— + ——— + ———.
5. சிரித்தான் = ——— + ——— + ———.

### கேள்விகள் :

1. மக்கள் தங்கள் சொத்தை இழக்கக் காரணம் என்ன?
2. 'கூட்டுறவுச் சங்கம்' என்பது என்ன?
3. கூட்டுறவுச் சங்கம் ஏற்படுத்துவது எப்படி?
4. சங்க நிருவாகங்கள் எப்படி நடை பெறும்?
5. கூட்டுறவுச் சங்கத்தினால் ஏற்படும் நன்மைகள் எவை?
6. யார் யார் கூட்டுறவுச் சங்கத்தினால் நன்மை அடை-யலாம்?
7. கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத்தினர்கள் எப்படிப்-பட்டவர்களாய் இருக்க வேண்டும்?

———

# 8. கரிகாற்சோழன்

1. பொன் கொழிக்கும் காவிரி பாயும் சோழ-நாட்டை ஆண்ட அரசர்களுள் மிகச் சிறந்தவன் **கரிகாற்சோழன்**. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன் இம்மன்னன் சோழ நாட்டை வெகு சிறப்-புடன் ஆண்டு வந்தான். இவன் தந்தை **இளஞ்சேட்சென்னி** என்பவன். **இரும்பிடர்த் தலையார்** என்னும் பெரும்புலவர் கரிகாலனுக்கு அம்மானு-ராவர்.

2. கரிகாலன் இளமையிலேயே தந்தையை இழந்தனன். உறவினர்களிடையே அரசாட்சி காரணமாகச் சச்சரவு ஏற்பட்டது. பகைவன் இளை-யவன் என்று கரிகாலனைச் சிறை செய்தான்; அதோடு விடாமல், ஒரு நள்ளிரவில் சிறைச்சாலை-யையும் தீமூட்டி எரித்தான். எப்படியோ கரிகாலன் தெய்வச் செயலால் சிறையினின்று தப்பி வெளி-யேறிச் சென்றான். இவ்விபத்தால் இவன் கால்-கள் கரிந்து போயின. இதனால், இம்மன்னனைக் '**கரிகாலன்**' என்று மக்கள் வழங்கினார்கள். கரி-காலன் சேர நாடு சென்று தன் அம்மானார் இரும்-பிடர்த்தலையாரைச் சந்தித்து அவருடன் வசித்து வந்தான்.

3. கரிகாலன் சிறையில் தீ விபத்தினால் இறந்துவிட்டான் என்று அவன் பகைவன் கருதி-னான். குடி மக்கள் ஒருங்கு திரண்டு எதிர்த்து, கொடுங்கோல் மன்னனை நாட்டை விட்டுத் துரத்தி-விட்டார்கள். சோழநாட்டிற்கு மன்னன் இல்லை என்ற குறைபாட்டை நீக்க மக்கள் கருதினார்கள்; அக்கால வழக்கப்படி, பட்டத்து யானையின் கையில்

மாலையைக் கொடுத்து அனுப்பினார்கள். அந்த யானை கருவூரையடைந்து, கரிகாலனுக்கு மாலையிட்டு, அவனைத் தன் பிடர்மீது வைத்துக்கொண்டு வந்தது. அவனே சோழ நாட்டிற்கு மன்னன் ஆனான்.

4. கரிகாலன் குடி மக்களின் குறைகளைப் போக்கி நாட்டை ஆண்டான். குடிகளும் அவனிடம் மதிப்பும் அன்பும் செலுத்தினார்கள். அவன் வீரத்திலும் கல்வியிலும் சிறந்து விளங்கினான்; நாட்டை வளப்படுத்தினான். முதல் முதல் காவிரிக்கு இரு புறமும் கரையிட்டவன் அக்கரிகாலனே ஆவான். அவன் புலவர்களை ஆதரித்தான்; அவர்களுக்கு வேண்டும் பரிசில்களை ஈந்து பெருமைப்படுத்தினான். அப்புலவர்களும் கரிகாலனைக் குறித்துப் பாராட்டிப் பாடியுள்ளார்கள்.

5. கரிகாலன் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டின் பெருமை குன்றாது குடி மக்களைப் பாதுகாத்து வந்தான். அவன் காலத்தில் காவிரிப்பூம்பட்டினம் பெருந்துறைமுகமாய் இருந்தது. வெளி நாடுகளிலிருந்து பொருள்கள் அங்கே இறக்குமதி செய்யப்பட்டன. சோழ நாட்டினின்றும் பல பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. அவற்றிற்கு வரி விதிக்கப்பட்டது. பல அழகிய வீதிகளும், கட்டடங்களும், பூங்காவும் பொலிவுற விளங்கிப் பட்டினத்தை அழகுறச் செய்தன. அந்நகரில் இலக்கியம், இசை, சிற்பம் முதலிய கலைகள் சிறந்தோங்கின.

6. கரிகாலன் போரில் பல மன்னர்களை வென்றான்; தன் மீது போருக்கு வந்த பெருஞ்-

சேரலாதனையும், அவனுக்குத் துணையாய் வந்த பாண்டியனையும், 'வெண்ணி' என்னும் ஊர்ப்புறத்தே போரிட்டு வென்றான்; அவ்விரு வேந்தர்களுக்கும் துணையாய் வந்த பதினொரு சிற்றரசர்களையும் போரில் முறியடித்தான்; ஒரு முறை இமயம் வரை சென்று, இடையில் உள்ள வடநாட்டரசர்களை எல்லாம் வென்றான்; இமயமலையில் புலிக்கொடியை நாட்டினான்.

7. கரிகாலன் நீதியிலும் தவறாதவன். அவன் இளைஞனாயிருந்த காலத்தில், முதியவர் இருவர் தம் வழக்கை அவனிடம் முறையிட வந்தனர்; மன்னனைக் கண்டதும், "இவனா நம் வழக்கைத் தீர்க்க வல்லவன்!" என்று தமக்குள் எண்ணினர். அக்குறிப்பை அறிந்த கரிகாலன், அரண்மனை உட்சென்று முதியவன் போல வேடம் தரித்து வந்து, அவர்கள் வழக்கைத் தீர்த்தான். இரு முதியோரும் அவன் தீர்ப்பால் நியாயம் உணர்ந்து களிப்புடன் சென்றனர்.

8. கரிகாலனுக்கு அவன் அம்மானான இரும்பிடர்த்தலையார் பெரிதும் துணையாயிருந்தார். முடத்தாமக் கண்ணியார் என்னும் புலவர் கரிகாலனது நாட்டின் சிறப்பையும் ஆட்சியின் சிறப்பையும் பாடியுள்ளார். அந்நூலுக்குப் பொருநர் ஆற்றுப்படை என்பது பெயர். தன்னையும் தன்னாட்டினையும் பட்டினப் பாலை என்னும் நூலில் சிறப்பாகப் பாடிய உருத்திரங்கண்ணனார் என்னும் புலவருக்குக் கரிகாலன் பதினாறு லட்சம் பொன் பரிசு கொடுத்தான். கற்றவர்கள்பால் அவன் கொண்ட அன்புதான் என்னே!

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| கொழிக்கும் | கரிகாற்சோழன் | ஆயிரத்தெண்ணூறு |
| சச்சரவு | நள்ளிரவில் | இரும்பிடர்த்தலையார் |
| குறைபாடு | துரத்திவிட்டனர் | சிறை |
| தலை நகர் | இரு புறமும் | ஆதரித்தான் |
| பிடர் | பொலிவுற | குடி மக்கள் |
| குன்றுது | முதியவன் | அம்மான் |
| முறியடித்தான் | ஊர்ப்புறம் | வழக்கு |
| கொடை | புலவர் | பெருமாட்டி |
| வெற்றி | இலட்சம் | பட்டினப்பாலை |
| பொருநர் | ஆற்றுப்படை | பரிசில் |

பயிற்சி :

I. 1. கீழ் வரும் சொற்றொடர்களைப் பிரித்துக் காட்டு :—

| | |
|---|---|
| ஆயிரத்தெண்ணூறு | அப்புலவர் |
| பொலிவுற | கரையிட்டான் |
| தன்னாட்டினை | செய்துள்ளனர் |

2. கீழ் வரும் சொற்றொடர்களைச் சேர்த்து எழுது :—

| | |
|---|---|
| அ + காலம் | அவன் + இடம் |
| எ + பொருள் | போர் + இட்டு |

3. கீழ் வரும் வினை முற்றுக்களின் பகுதிகளைப் பிரித்துக் காட்டு :—

| | |
|---|---|
| ஆண்டான் | வசித்தான் |
| சென்றான் | வென்றான் |
| வந்தான் | உணர்ந்தான். |

கேள்விகள் :

1. கரிகாலன் தந்தையின் பெயர் என்ன?
2. கரிகாலன் ஏன் சிறைப்பட்டான்?
3. கரிகாலன் ஏன் நாட்டை விட்டு ஓடினுன்?
4. கரிகாலன் என்று அம்மன்னனுக்குப் பெயர் வரக் காரணம் என்ன?
5. கரிகாலன் தன் நாட்டை மீண்டும் எப்படிப் பெற்ருன்?
6. கரிகாலன் விவசாயிகளுக்குச் செய்த நன்மை என்ன?
7. அவன் ஆட்சி முறை எப்படிப்பட்டது?
8. கரிகாலன் புலவர்களை ஆதரித்தான் என்பதற்குச் சாட்சி என்ன?
9. கரிகாலன் போர்த் திறம் எப்படித் தெரிகிறது?
10. கரிகாலன் நீதி தவருதவன் என்பது எதனுல் விளங்குகிறது?

---

# 9. உலோகங்கள்

1. பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்படும் கடினப் பொருள்களுக்கு **உலோகங்கள்** என்பது பெயர். உலகில் பலவேறு இடங்களில் பல வகையான உலோகங்கள் கிடைக்கின்றன. கடவுள் மக்களுக்கு வேண்டிய பொருள்களைப் பூமியின் வெகு ஆழத்தில் சேமித்து வைத்துள்ளார். அறிஞர் தம் ஆராய்ச்சியாலும் முயற்சியாலும் அவற்றைக் கண்டெடுக்கின்றனர். நாகரிகம் வளர்ந்ததற்கும் உலோகங்களே காரணம் என்று சொல்லலாம். பொன், வெள்ளி, இரும்பு, செம்பு, மாங்கனிசம்

முதலிய உலோகங்கள் மக்களுக்குப் பலவகைகளில் நன்மை செய்கின்றன.

2. அதிக விலை மதிப்பு வாய்ந்த உலோகம் தங்கம். இது ஒளியும் உறுதியும் வாய்ந்தது; துருப் பிடியாதது; எப்போதும் நிறத்தின் ஒளி மாறாதது. ஆகவே, நாம் இதனால் ஆபரணம்செய்து அணிகின்றோம். உலக நாடுகள் எல்லாம் இவ்வுலோகத்தால் நாணயங்களைச் செய்கின்றன; பெருநிதியாக இதனையே கருதிவருகின்றன. ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குப் பொன் மாற்றத்துக்குப் பொன் நாணயமே ஒப்புக்கொள்ளப்படுகின்றது. தங்கம் நம் நாட்டில் மைசூரைச் சார்ந்த கோலாரில், சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கப்படுகிறது; தென்னாப்பிரிக்காவில் ஏராளமாகக் கிடைக்கின்றது; அமெரிக்கா, இரஷ்யா, கனடா, ஆஸ்திரேலியா என்னும் இடங்களிலும் கிடைக்கிறது.

3. தங்கத்துக்கு அடுத்தபடி விலை மதிப்பும் ஒளியும் உறுதியும் வாய்ந்தது வெள்ளி. இதனை 'வெண்பொன்' என்றும் கூறுவர். இதனால் ஆபரணமும், பலவகைப் பாத்திரங்களும் செய்யப்படுகின்றன. வெள்ளிப்பாத்திரம் துருப்பிடியாது. வெள்ளி அமெரிக்காவில் ஐக்கிய நாடுகளிலும், பெரு என்னும் இடத்திலும், ஆஸ்திரேலியா முதலிய இடங்களிலும் ஏராளமாகக் கிடைக்கும்.

4. இரும்பு கருமை நிறம் வாய்ந்த வன்மையான உலோகம். இதனால் கோடிக்கணக்கான எந்திரங்கள் செய்யப்படுகின்றன. தண்டவாளங்களும், உழவுக் கருவிகளும், கர்டர், தூண், ஜன்னற்கம்பிகள் முதலிய கட்டடச் சாமான்களும் செய்யப்படுகின்றன. இரும்பின் சிறப்பைக்கருதி இதனைக் 'கரும்பொன்' என்று வழங்குவதுமுண்டு.

5. இரும்பில் பல வகை உண்டு. அவை வார்ப்பு இரும்பு, தேனிரும்பு, எஃகு என்பவை. உருக்கு இரும்பு வார்ப்பு இரும்பு எனப்படும். இதனால், தூண்-கள், விவசாயக் கருவிகள் முதலியன செய்யப்படு-கின்றன. வார்ப்பு இரும்பைக் காய்ச்சி, சிறு மாறுதல் செய்து, தேன் இரும்பு செய்யப்படுகிறது. இதனால், ஆணி, சங்கிலிகள், தாழ்ப்பாள், கீல் முதலிய பொருள்கள் செய்யப்படுகின்றன. வார்ப்பு இரும்புடன் குரோமியமும் மாங்கனிசமும் சேர்த்து எஃகு இரும்பு செய்யப்படுகிறது. இதனால் இரயில் எஞ்சின்களும் எந்திர உறுப்புக்களும் செய்யப்படுகின்றன.

6. செம்பும் மக்கள் வாழ்க்கைக்கு மிகவும் அவசியமானது. இதனால் பாத்திரங்கள் செய்யப்-படுகின்றன. பழங்காலத்தில் சாசனங்கள் செப்-பேடுகளில் எழுதப்பட்டன. மின்சாரம் செப்புக் கம்பியின் மூலமாகச் செல்லும். நாணயங்கள் செய்யவும் செம்பு உபயோகப்படுகிறது. கலவை உலோகங்கள் செய்யவும் இதனைப் பயன்படுத்து-கின்றனர். அமெரிக்கா, ஐக்கிய நாடுகள், கனடா, ஜப்பான், இரஷ்யா என்னும் இடங்களில் இவ்-வுலோகம் அபரிமிதமாகக் கிடைக்கிறது.

7. அலுமினியம் என்பது மண்ணில் கலந்-துள்ள ஒருவகைத் தாதுப்பொருள். இதை மண்ணி-லிருந்து எடுக்கிறார்கள். இது உலோகங்களில் மிகவும் இலேசானது; துருப்பிடியாதது; பலவகைப் பாத்திரங்கள் இதனால் செய்யப்படுகின்றன. இதன் விலையும் குறைவு. ஆகாய விமானம் செய்ய இது மிகவும் ஏற்றது. இது மேல் நாடுகளிலும், நம் நாட்டில் பம்பாய், பீஹார், சென்னை முதலிய இடங்களிலும் கிடைக்கிறது.



ஜேம்ஷெட்பூர் டாட்டா இரும்பு எஃகுத் தொழிற்சாலை

8. இப்போது ஜேம்ஷெட்பூரில் உயர்தர இரும்பும் நிலக்கரியும் கிடைக்கின்றன. ஆகையால், டாட்டா இரும்புத் தொழிற்சாலை அங்கு ஏற்பட்டுள்ளது. எல்லாவகை இரும்புச் சாமான்களும் அங்குச் செய்யப்படுகின்றன. ஆசியா நாட்டிலே உள்ளவைகளில் அதுதான் பெரிய இரும்புத் தொழிற்சாலை. நம் நாட்டின் முன்னேற்றத்திற்கு அது போன்ற தொழிற்சாலைகள் பல ஏற்படுத்தப்பட வேண்டும். அவைகளுக்கு இரும்புதான் பிரதானம்.

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| வன்மை | உலோகங்கள் | ஆழத்தில் |
| நாணயங்கள் | குரோமியம் | மதிப்பு |
| பெருநிதி | துருப்பிடியாது | கோலார் |
| ஐக்கியநாடு | சுரங்கம் | தங்கம் |
| தண்டவாளம் | வெண்பொன் | பாத்திரம் |
| அலுமினியம் | எந்திரங்கள் | அபரிமிதமாக |
| பிரதானம் | ஜேம்ஷெட்பூர் | சாதனங்கள் |

பயிற்சி :

I. (1) உலோகமே தன் கதையைச் சொல்வது போல ஒரு கட்டுரை எழுது.

(2) கீழ் வரும் சொற்றொடர்களை வாக்கியத்தில் அமை :—

உறுதியும் ஒளியும், பல்வேறு இடங்களில், அபரிமிதமாக, ஏராளமாக.

(3) கோடிட்ட இடங்களில் ஏற்ற சொல்லை அமை :—

(1) கோலாரில்———எடுக்கிறார்கள்.
(2) வெள்ளிக்கு——பொன்——பெயர்.
(3) தங்கம்——ஆப்பிரிக்காவில்————கிடைக்கிறது.
(4) வெள்ளிப்——தரு——.
(5) ———ஆஸ்திரேலியாவிலும்———என்ற ———ஏராளமாகக்———.

(4) உண், பாடு, ஓடு — இவ்வினைகளைப் பெயர்ச்-சொற்களாக மாற்று.

II. (1) பார்த்தான் = பார் + த் + ஆன் — இறந்த காலம்
கண்டான் = காண் + ட் + ஆன் ,,
விற்றான் = வில் + ற் + ஆன் ,,
ஓடினான் = ஓடு + இன் + ஆன் ,,

இவ்வினை முற்றுக்கள் எல்லாம் இறந்த காலத்தைத் தெரிவிக்கின்றன.

இறந்த கால இடைநிலைகள் த், ட், ற், இன் என்பன. இடைநிலையைக் கண்டு காலத்தை அறியலாம்.

(2) உண்டான், செய்தான், பெற்றான், போயினான் —இடைநிலைகள் கூறு.

## கேள்விகள் :

1. உலோகங்கள் எங்கிருந்து எடுக்கப்படுகின்றன ?
2. தங்கம் உலகில் எங்கெங்குக் கிடைக்கிறது ?
3. நம் நாட்டில் தங்கம் எங்கு எடுக்கிறார்கள் ?
4. தங்கமும் வெள்ளியும் உயர்ந்த உலோகங்கள் என்று மதிக்கப்படுவதேன் ?
5. அவற்றின் உபயோகங்கள் யாவை ?

6. இரும்பு எத்தனை வகைப்படும்? அவற்றின் உபயோகங்கள் யாவை?
7. அலுமினியம் எதற்குப் பயன்படும்?
8 நம் நாட்டில் இரும்பு எங்குக் கிடைக்கிறது?
9. டாட்டா இரும்புத் தொழிற்சாலை எங்கு உள்ளது?
10. எந்திரங்கள், பாத்திரங்கள், ஆகாய விமானங்கள் — இவை செய்ய எந்தெந்த உலோகங்கள் பயன்படுகின்றன?
11. கலவை உலோகம் செய்யப் பயன்படும் உலோகம் எது?

---

# 10. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

1. நம் தமிழ் நாட்டில் பல கவிஞர் தோன்றியுள்ளனர்; இன்னும் தோன்றுவர். தேசீயக்கவிஞர் பாரதியாருக்கு அடுத்தபடி சிறந்த கவிஞர் என்று எல்லோராலும் போற்றப்படுகிறவர் **கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை** ஆவர். அவர் வரலாற்றை நாம் அவசியம் படிக்க வேண்டும். அவர் நமக்காகப் பல பாட்டுக்களைப் பாடியுள்ளார்.

2. 1876-ஆம் ஆண்டு கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை திருநெல்வேலி ஜில்லாவில், **தேரூர்** என்னும் ஊரில், **சிவதாணுப் பிள்ளைக்கும் ஆதிலட்சுமி அம்மையாருக்கும்** அருந்தவப் புதல்வராய்த் தோன்றினர். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்,' என்ற முதுமொழிப்படி அவர் இளமையிலேயே தாய்மொழிப்பற்று மிகுந்தவராயிருந்தார். ஒழுக்கத்தின் உறைவிடம் என்று தம்மைப் பலரும் புகழும்படி



கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

அவர் தம் பெற்றோர்களிடமும் ஆசிரியர்களிடமும் மரியாதையுடன் நடந்து வந்தார். அவர் முதலில் தம் தெருவில் உள்ள ஆரம்பப் பாடசாலையில் பயின்றார்; பின்பு கோட்டாறு என்னுமிடத்தில் உள்ள ஆங்கிலப் பாடசாலையில் சேர்ந்து பயின்று பரீட்சைகளில் தேறினார். அவர் எப். ஏ. வகுப்பு வரையில் படித்தார்.

3. கவிமணிக்குத் தமிழில் பெரும்புலமை அடைய வேண்டும் என்ற ஆசை அதிகரித்தது,

அவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த சாந்த லிங்கத் தம்பிரான் என்பவரிடம் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களை ஐயம் திரிபு அறக்கற்று வந்-தார்; பின்பு திருவனந்த புரத்தில் உள்ள போதனா முறைக் கல்லூரியில் பயின்று, 1885-ஆம் வருடம் தேர்ச்சியடைந்தார். அவர் தம் தந்தையார் இறக்-கவே, தம் குடும்பத்தைத் தாங்க வேண்டியவரானார். புத்தேரி என்னுமிடத்தில் பிறந்த உமையம்மையார் என்பவரை அவர் வாழ்க்கைத் துணைவியாராகக் கொண்டு இல்லறம் நடத்தினார்.

4. அவர் முதலில் ஆரம்பப் பாடசாலையில் ஆசிரியராய் அமர்ந்து, நாளடைவில் திருவனந்த-புரம் பெண்கள் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளர் பதவியை ஏற்றுத் திறம்படப் பணியாற்றினார். அங்கு நடந்த ஒரு சம்பவம் அவர் வாழ்க்கையையே மாற்றிவிட்டது. ஒரு நாள் கல்லூரிக்கு விஜயம் செய்த ஒரு கல்வி அதிகாரி, அவரைப் பெண்கள் கல்லூரியில் வேலைபார்ப்பது தகுதியன்று என்றும், அதனால் மலையாளத்தில் உள்ள ஆடவர் கல்லூரிக்கு மாற்றப்படுவார் என்றும் கூறினார். உடனே கவி-மணி தம் மொழிப்பற்றை வெளிப்படுத்தித் தாம் தமிழர் தலைமையிலுள்ள கல்லூரியிலேதான் வேலை செய்ய முடியும் என்று உறுதியாகக் கூறினார். இரு-வர்க்கும் தொடர்ந்து ஏற்பட்ட வாக்கு வாதத்தினால் உடனே ராஜிநாமாக் கடிதம் எழுதித் தந்து, வீடு சென்றார்.

5. அவர் உரிமையுடன் வாழக் கருதினார்; அதனால், மீண்டும் ஓரிடத்தில் சேவை செய்வதில்லை என்று முடிவு செய்தார். அன்று முதல் அவர் இறக்கும் வரை, தமிழில் பல கவிகள் இயற்றி,

நாட்டு மக்களுக்குத் தொண்டு புரிந்து வந்தார்; பத்திரிகைகள் வாயிலாகக் கட்டுரைகள், கவிகள், ஆராய்ச்சிகள் முதலியவற்றை ஏராளமாக வெளிப்படுத்தினர். குன்றின்மீது ஏற்றிய விளக்கென அவர் புகழ் தமிழ் நாடெங்கும் பரவியது. முக்கியமாகக் குழந்தை உள்ளம் படைத்த கவிமணி, குழந்தைகளுக்காக எளிய இனிய பாடல்களைப் பாடினர். நம் நாட்டுச் சிறியவரும் பெரியவரும் அவர் கவிகளைப் படித்து இன்புறுகின்றனர். அவர் நூல்களில் சிறந்தது **மலரும் மாலையும்** என்பது. அதில் அவர் பாடிய சிறந்த பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

6. 1940-ஆம் ஆண்டு அவருக்குக் '**கவிமணி**' என்னும் பட்டம் தமிழ் நாட்டு அறிஞர்களால் வழங்கப்பட்டது. 1950-ஆம் ஆண்டு திருவாவடுதுறை மகா சன்னிதானமாகிய அம்பலவாண தேசிகர் கவிமணியைப் பொன் ஆடை போர்த்திச் சிறப்பித்தார். 1954-ஆம் ஆண்டு கவிமணி தமிழர் உள்ளம் வாட இறைவன் திருவடி நிழலில் அமர்ந்தார். தேரூர் மக்களால் கவிமணி ஞாபகார்த்த மண்டபம் கட்டப்பட்டது. பல கழகங்கள் கவிமணியின் பிறந்த தினத்தைக் கொண்டாடி வருகின்றன. அவர் புகழ் என்றும் அழியாதிருக்கும் என்பதில் ஐயமில்லை.

புதிய சொற்கள்:

| | | |
|---|---|---|
| கவிஞர்கள் | அருந்தவப் புதல்வர் | முளையிலே |
| கவிமணி | வரலாறு | மரியாதை |
| ஒழுக்கம் | உறைவிடம் | பரீட்சை |
| மொழிப்பற்று | ஐயம் | திரிபு |

| | | |
|---|---|---|
| குன்று | ஆதீனம் | வாழ்க்கை |
| கல்லூரி | விஜயம் | துணைவியர் |
| விரிவுரையாளர் | பணியாற்றினர் | போதன முறை |
| ஞாபகார்த்தம் | மண்டபம் | பாஷாபிமானம் |
| கட்டுரைகள் | உள்ளம் | தேசிகர் |

பயிற்சி:

1. கீழ் வரும் சொற்றொடர்களை வாக்கியங்களில் அமை:—
ஐயம் திரிபற, மொழிப்பற்று, பணியாற்றி

2. இவற்றைக் கவனி:—
கல் + ல் + எறிந்தான் = கல்லெறிந்தான்
மண் + ண் + எண்ணெய் = மண்ணெண்ணெய்
தனிக்குற்றெழுத்துக்கு முன் நிற்கும் மெய்யெழுத்து வருமொழி முதலில் உயிர் எழுத்து வந்தால் இரட்டும் (இரண்டாகும்).

3. பிரித்து எழுது:—
(1) பொன்னெழுத்து
(2) விண்ணருவி
(3) வில்லொடித்தான்
(4) கண்ணிழந்தான்

4. படிக்கிறன் — படி + கிறு + ஆன்
ஓடுகின்றன் — ஓடு + கின்று + ஆன்
படியாநின்றன் — படி + ஆநின்று + ஆன்
கிறு, கின்று, ஆநின்று என்பவை நிகழ்கால இடைநிலைகள்.

காண்பான் — காண் + ப் + ஆன் — எதிர் காலம்.

செல்வான் — செல்+வ்+ஆன் — எதிர்காலம். ப், வ் என்னும் எழுத்துக்கள் எதிர்கால இடைநிலைகள்.

செய்வான், உண்பான், போவார், தின்பான் — இவ்வினைமுற்றுக்களைப் பகுதி விகுதி இடைநிலைகளாகப் பிரித்துக் காட்டு.

5. இப்பாடத்தில் மூன்றும் பத்தியில் உள்ள இறந்தகால வினைமுற்றுக்களை எடுத்து எழுது.



### கேள்விகள் :

1. கவிமணி எப்படிப் போற்றப்படுகிறார்?
2. கவிமணி எங்கு யாருக்குப் புதல்வராய்த் தோன்றினார்?
3. அவர் பெற்றோர்களிடமும் ஆசிரியரிடமும் எவ்விதம் நடந்துகொண்டார்?
4. கவிமணி யாரிடம் தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் பயின்றார்?
5. கவிமணி எங்கெங்குப் பணியாற்றினார்?
6. அவர் உத்தியோகத்தை ஏன் ராஜினாமாச் செய்தார்?
7. கவிமணி நாட்டு மக்களுக்குச் செய்த தொண்டு என்ன?
8. கவிமணிக்கு யார் யார் எவ்வெவ்விதம் சிறப்புச் செய்தனர்?
9. கவிமணி ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்ட மண்டபம் எங்குள்ளது?
10. கவிமணியின் பாடல்கள் எப்படிப்பட்டவை?

———



# 11. பத்திரிகை வாசித்தல்

(மௌன வாசிப்பு)

நாம் பள்ளிக் கல்வி அறிவுடன் அமையாமல் உலகில் நடைபெறும் விஷயங்களையும் தெரிந்து-கொள்ளவேண்டும். உலக சம்பவங்களைத் தினசரிப்-பத்திரிகை நமக்குத் தெரிவிக்கின்றது. அதில் அரசியல், தொழில், வியாபாரம், கல்வி முதலி-யவை சம்பந்தமான விஷயங்களும் பிரசுரிக்கப்படு-கின்றன. அறிஞர்களின் கட்டுரைகளும் வெளி-யாகின்றன. பல கழகங்கள் நாட்டிற்குப் புரியும் சேவைகளையும் பத்திரிகையால் அறியலாம். பத்திரி-கையில் காணும் சிறந்த விஷயங்களைச் சேகரித்துத் தொகுத்து வைத்தல் நமக்குப் பயன்படும்.

பத்திரிகையில் வந்த செய்திகள் சில கீழே தரப்பட்டுள்ளன. அவற்றை மௌனமாக வாசித்-துப் பயிலலாம்.

## 1. சாரண இயக்கத்தின் முக்கியம்

—சென்னை, ஜூலை 31, 1955

நேற்றுத் திருவல்லிக்கேணி வென்லாக்குப் பூங்காவில் கிழக்குச் சென்னைச் சாரணர் சங்கத்-தின் அணி வகுப்பில் டாக்டர் குன்ஸ்ரு பேசினார்.

சாரண இயக்கத்தில் ஆசிரியர் பெரிதும் ஊக்கம் எடுத்துக்கொள்ளவும், வாரம் ஒரு முறை ஒரு மணி நேரமாவது தீவிரமாகச் சாரணப் பணி-யாற்ற அவகாசம் அளிக்கவும் தக்கவாறு கல்வி இலாக்கா வசதிகளை மாற்றி அமைக்க வேண்டும்

என்று ராஜ்ய சர்க்கார்களை ஸ்ரீ குன்ஸ்ரு கேட்டுக்-கொண்டார்.

கிழக்குச் சென்னைச் சாரணத் தலைவர் ஸ்ரீ முருகப்பச் செட்டியார் பிரதம கமிஷனருக்கு நல்வரவு கூறினர்.

பிரதாப் சாரணக் குழுவைச் சேர்ந்த ஸ்ரீ. கே. எஸ். வேங்கடராமன், ஆர். கோபால கிருஷ்ணன் முதலியோருக்குப் பிரதம கமிஷனர் பாரத சாரணச் சின்னங்களை வழங்கினர். சுமார் அறுநூறு சாரணர் அணி வகுப்பில் கலந்து-கொண்டனர்.

—சுதேசமித்திரன் 31-7-55

## 2. ஜப்பானிய முறைச் சாகுபடி

மன்னார்குடி, ஆகஷ்டு 23, 1955

இன்று காலை 12 மணிக்கு இவ்வூர்த் திருவா-ரூர் ரோடிலிருக்கும் ஐயர் சமாதி அருகே ஜப்பா-னிய முறையில் நெல் சாகுபடி செய்யப்பட்டிருக்கும் இடத்தை ஸ்ரீ அஜீத் பிரஸாத் ஜெயின் (யூனியன் உணவு மந்திரி), ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் (சென்னை விவசாய மந்திரி) ஆகியோர் பார்வையிட்டனர்.

இவர்கள் இன்று காலை பட்டுக் கோட்டையி-லிருந்து வடபாதி மங்கலம் போகும் வழியில் இங்கு இறங்கினர்கள். மேற்படி நிலத்தில் ஜப்பானிய முறையில் பயிர் செய்துள்ள ஸ்ரீ சோமசுந்தரம் பிள்ளை, மந்திரிகளுக்கு மாலைபோட்டு வரவேற்ருர்.

—சுதேசமித்திரன், 25-8-55

## 3. இரண்டாவது திருக்குறள் மகாநாட்டில் தீர்மானம்

—திருச்சி, ஆகஷ்டு 27, 55

இரண்டாவது திருக்குறள் மகாநாடு இன்று காலை தேவர் ஹாலில் ஸ்ரீ திருக்குறள் முனிசாமி எம். பி. தலைமையில் நடந்தது. ஸ்ரீ ப. அரங்கசாமி அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.

திருச்சி ஜில்லா போர்டு உபதலைவர் ஸ்ரீ. வி. ஏ. முத்தையா மகாநாட்டை ஆரம்பித்து வைக்கையில் ராஜ்யத்திலுள்ள எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் குறளைப் பாடமாக வைக்கவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார்.

ஸ்ரீ முனிசாமி தமது தலைமையுரையில் குறளில் உலக உண்மை அனைத்தும் அடங்கிக் கிடப்பதாயும், அதைப்படிக்க வேண்டுவது அனைவர்க்கும் கடமையாகும் என்றும் கூறினார். மகாநாட்டில் திருக்குறளைக் கட்டாய பாடமாக வைக்கும்படி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

—சுதேசமித்திரன், 28-8-55

பயிற்சி :

I இவற்றைக் கவனி :—

பேருரை — பெருமை + உரை

சிலவற்றை — சில + அற்று + ஐ

பணியாற்ற — பணி + ஆற்ற

அதனை, சிற்றுரை, பலவற்றை — பிரித்துக் காட்டு.

II (1) இவற்றைக் கவனி :—

படி — படித்தான் — படித்த — படித்து

உழு — உழுதான் — உழுத — உழுது

—பகுதி, வினைமுற்று, பெயரெச்சம், வினை எச்சம் முறையே இருப்பதைக் கவனி.
உண், பாடு, நடு, எழு—இப்பகுதிகளை முற்றாக-வும் இரு வகை எச்சங்களாகவும் மாற்று.

(2) குரங்கு — பிராணி, குறங்கு—தொடை
இரை — தீனி, இறை — கடவுள்
திரை — அலை, திறை — கப்பம்
ரகர, றகர வேறுபாட்டை அறிந்து இப்படி ஒவ்வொரு பாடத்திலும் வரும் சொற்களைக் குறித்துக்கொள்.

கேள்விகள் :

1. பத்திரிகை படிப்பதனால் உண்டாகும் நன்மைகள் எவை?
2. உனக்குப் பிரியமான பத்திரிகை எது?
3. சாரணர் சங்கத்தில் டாக்டர் குன்ஸ்ரூ பேசிய-தென்ன?
4. திருக்குறள் மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானம் யாது?

---

# 12. தேனீக்கள்

1. தேன் மிகவும் இனிமையானது. அது தேனீக்களால் மலர்களிலிருந்து சேகரித்துக் கூடுக-ளில் சேர்க்கப்படும். தேனீக்கள் காலையிலிருந்து மாலை வரை இரண்டு அல்லது மூன்று மைல் தூரம் அலைந்து திரிந்து, பல மலர்களில் அமர்ந்து அமர்ந்து, தேனைச் சிறிது சிறிதாக உட்கொண்டுவந்து, மாலை-யில் கூட்டில் நிரப்பும். காடுகளிலும் மலைகளிலும் உள்ள உயர்ந்த மரக்கிளைகளில் தேனீக்கள் கூடு

கட்டும். தேன் கூடு பார்ப்பதற்கு விநோதமாய் இருக்கும். ஈக்கள் ஒன்றை ஒன்று கால்களால் பின்னிக்கொண்டு மாலைபோலத் தொங்கும். அவை தம் அடிவயிற்றில் உள்ள ஓர் உறுப்பிலிருந்து ஒரு வித மெழுகை வெளிப்படுத்தும். சில ஈக்கள் மெழுகின் மத்தியில் சென்று அறுகோண அறை-களை அமைக்கும்.

2. தேனீக்களில் பல வகை உண்டு. அவை சிறிய தேனீ, மலைத் தேனீ, காட்டுத் தேனீ என்பவை. மலைத்தேனீ அதிகமாகத் தேனைத் தரும். காட்டுத் தேனீக்களும் அதிக தேனைக் கொடுத்தாலும், அவற்றை மக்களால் வளர்க்கமுடி-யாது. அவற்றிற்கு விஷம் அதிகம். மறவர்கள் தீப்பந்தம் கொண்டு, தேன் கூட்டில் உள்ள தேனீக்களை மாய்த்துத் தேன்கூட்டைக் கொண்டு வந்து, கையால் பிழிந்து தேனை எடுப்பார்கள்.

3. சிறிய தேனீக்களில் இராணி ஈ, ஆண் ஈ, வேலைக்கார ஈ எனப் பல வகை உண்டு. வேலைக்-கார ஈக்களே தேனைக் கொண்டு வந்து கூட்டில் சேர்க்கும்; கூட்டிற்கான வேலைகள் அனைத்-தையும் கவனிக்கும். ஆண் ஈ சோம்பேறி. அது சுகமாய்த் தேனை உண்டு காலம் கழிக்கும். அது ஒரு வேலையும் செய்யாது. இராணி ஈ முட்டைகளை இட்டுக்கொண்டேயிருக்கும். ஒரு கூட்டில் ஒரே இராணி ஈத்தான் இருக்கும். ஒரு கூட்டிற்கு வேண்டிய முட்டைகளை அது அறையில் இட்டுக்-கொண்டேயிருக்கும். சில ஈக்கள் செவிலித்தாய் போல இருந்து, முட்டைகளைப் பாதுகாப்பதுடன் முட்டையிலிருந்து வெளிப்படும் தேனீக் குஞ்சுகளை-யும் தீனி கொடுத்துக் காப்பாற்றும். வேலைக்கார

ஈக்கள் அடிக்கடி கூட்டைப் பழுதுபார்க்கும். இறந்த தேனீக்களைக் கூட்டிலிருந்து அப்புறப்படுத்தும். வெளியிலிருந்து தேனைக் கவர வரும் புதிய ஈக்களை, உள்ளே வாராதபடி ஒட்டும்.

4. உருவத்தில் இராணி ஈ சற்றுப் பெரியதாகவும், ஆண் ஈ அதைவிடச் சிறியதாகவும் காணப்படும். வேலைக்கார ஈக்கள் உருவில் மிகச் சிறியனவாய் இருக்கும். சிற்றீக்களை மக்கள் இக்காலங்களில் செயற்கைக் கூடு அமைத்து வளர்க்கிறார்கள். அவை வளர்ப்பவர்களுக்கு நல்ல பலனைக் கொடுக்கின்றன. விவசாயக் கல்லூரிகளில், தேனீ வளர்க்கும் முறைகளைக் கற்பிக்கின்றனர். தேனீ வளர்த்தல் மக்களுக்கு ஒரு பொழுதுபோக்காகவும் இருக்கின்றது.

5. செயற்கைத் தேன் கூடு மரத்தால் செய்யப்படும். அது ஒரு சிறு வீடு போலக் காணப்படும். அதனுள் பல அறைகள் இருக்கும். அதில் தேனீக்கள் செல்லச் சிறு வழிகள் அமைக்கப்பட்டிருக்கும். அவற்றின் வழியாக இராணி ஈயைக் கூட்டில் விடவேண்டும். கூட்டைப் பரந்த வெளி இடங்களில் வைக்கவேண்டும். எறும்புகள் கூட்டில் செல்லாதபடி, கூட்டின் கால்களைச் சுற்றித் தண்ணீர் வைப்பது நலம். அறைகளில் உள்ள சட்டங்களில் ஈக்கள் மெழுகினால் கூடு கட்டித் தேனைச் சேகரித்து வைக்கும். சட்டத்தை எடுத்துத் தேன் பிழியும் எந்திரத்தில் வைத்துச் சுழற்றினால், தேன் சுத்தமாக வந்துவிடும். நம் நாட்டில் மலைக் குறவர்கள் தேனைச் சேகரித்துக்கொண்டு வந்து நகரங்களில் விற்பனை செய்வார்கள். அரசாங்கத்தாரும் தேனைத் தயாரித்து விற்பனை செய்கின்ற-

னர். தேன் மருந்துடன் கலந்து உண்பதற்கு உதவும். தினந்தோறும் சிறிது தேனை உண்டு வந்தால் மக்கள் உடல் ஆரோக்கியம் பெறும். தேன் மெழுகும் பல வகையில் பயன்படும். செயற்கைத் தேன்கூடுகளை வைத்து ஈக்களைப் பராமரிப்பதனல், ஜீவஹிம்ஸையின்றித் தேனையடையலாம்; அதனல் பொருளை ஈட்டி நம் வாழ்க்கையை வளப்படுத்தலாம்.

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| தேன் | தேனீ | சேகரிக்கப்படும் |
| விநோதமாக | மெழுகு | அடி வயிறு |
| அறுகோணம் | விஷம் | தீப்பந்தம் |
| மாய்த்து | பிழிந்து | செவிலித்தாய் |
| கவர | செயற்கைக் கூடு | சுழற்றினல் |
| ஹிம்ஸை | ஆரோக்கியம் | செயற்கை |

பயிற்சி :

I. கீழ் வரும் சொற்றொடர்களை வாக்கியத்தில் அமை:—
சிறிது சிறிதாக, அலைந்து திரிந்து, ஒன்றையொன்று, ஜீவஹிம்ஸை.

II. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமை :—

(1) சிறிதளவு ———— உண்டு ———— மக்கள் ———— ஆரோக்கியம் ————.

(2) செயற்கைத் ———— கூடுகள் ———— செய்யப்படும்.

III. வந்தான்
வந்தாள்
வந்தார்
வந்தது
வந்தன

இவ்வினை முற்றுக்களின் ஈற்றில் உள்ள விகுதியைக் கொண்டு பாலை அறியலாம்.

| | | |
|---|---|---|
| அன், ஆன் | —ஆண் பால் | விகுதி |
| அள், ஆள் | —பெண் பால் | ,, |
| அர், ஆர் | —பலர் பால் | ,, |
| அது | —ஒன்றன்பால் | ,, |
| அ | —பலவின் பால் | ,, |

**கேள்விகள் :**

1. தேனீ எவ்வாறு தேனைச் சேகரிக்கிறது ?
2. அது எவ்வாறு கூட்டை அமைக்கும் ?
3. தேனீக்களில் எத்தனை வகை உண்டு ?
4. வளர்க்கும் தேனீ எது ?
5. எது நஞ்சுடையது ?
6. ஆண் ஈ எப்படிப்பட்டது ?
7. இராணி ஈயின் வேலை என்ன ?
8. சிற்றீக்கள் செய்யும் வேலைகள் எவை ?
9. செயற்கைத் தேனெடுக்கும் முறை யாது ?
10. தேனின் பயன்கள் எவை ?

# 13. உழைக்க வேண்டும்

மன்னும் சுதந்தரத்தை—நாட்டில்
மக்கள் அடைந்தவுடன்
பொன்னை மழையாக—வானம்
பொழிந்து கொட்டிடுமோ? 1

பாலை சோலையாகிக்—கனிகள்
பழுத்து உதிர்ந்திடுமோ?
சேலை சேலையாகப்— பருத்திச்
செடிகள் காய்த்திடுமோ? 2

ஆக்கம் வேண்டுமெனில்—நன்மை
அடைய வேண்டுமெனில்
ஊக்கம் வேண்டுமப்பா!—ஓயாது
உழைக்க வேண்டுமப்பா! 3

உண்ணும் உணவுக்கும்—இடுப்பில்
உடுக்கும் ஆடைக்கும்
மண்ணில் அந்நியரை—நம்பி
வாழ்தல் வாழ்வாமோ? 4

நெற்றி யின்வியர்வை—நிதமும்
நிலத்தில் வீழ்ந்திடிலே
சற்றும் வாடாமல்—சுதந்தரம்
தழைத்து வருமப்பா! 5

சாதிச் சண்டையெல்லாம்—ஓய்ந்து
தணிய வேண்டுமப்பா!
நீதி நாடெங்கும்—நிலைத்து
நிற்க வேண்டுமப்பா! 6

உலக மக்களெல்லாம்—அன்போடு
ஒருதாய் மக்களைப்போல்
கலக மின்றிவாழும்—காலம்
காண வேண்டுமப்பா! 7

—கவிமணி. சி. தேசிக விநாயகம் பிள்ளை

கேள்விகள் :

1. முதல் இரு பாடல்களில் ஆசிரியர் வேடிக்கையாகக் கூறுவதென்ன ?
2. நாட்டில் செல்வம் தழைக்க வேண்டுமானல் மக்களிடம் என்ன வேண்டும் ?
3. எவற்றிற்கு அந்நியரை நம்பி வாழக்கூடாது ?
4. சுதந்தரம் எப்போது தழைக்கும் ?

பயிற்சி :

I. இப்பாடல்களில் ஆசிரியர் கூறுவதைத் தொகுத்தெழுது.

II. (1) இப்பாடல்களில் உள்ள வினை எச்சங்களை எடுத்து எழுதி, அவற்றின் பகுதிகளையும் பிரித்துக் காட்டு.

(2) காய்ந்தது, பொழிந்தது — இவ்வினை முற்றுக்களின் பகுதி, விகுதி இடைநிலை எவை ? விகுதி என்ன பாலைக் குறிக்கும் ?

---

# 14. பரதனும் குகனும்

(நாடகம்)

## காட்சி—I

| | |
|---|---|
| இடம் : | கங்கையை அடுத்த காடு |
| காலம் : | முற்பகல் |
| பாத்திரங்கள் : | குகன் (வேடர் தலைவன்), வேடர்கள் |

[பரதன், தன் தாய் தனக்கு ஈந்த முடி துறந்து, பெருந்துன்பத்துடன் மரவுரி உடுத்து, தன் பரிவாரத்துடன் இராமனைக் காட்டிலிருந்து அழைத்து

வரப் புறப்பட்டு, கங்கையின் வடகரையை அடைகிறான். குகன் அவனை வடகரையிலிருந்து கண்டு தவறாக அவன் மீது பெருஞ் சினங்கொள்கிறான்.]

குகன்: (தனக்குள்) ஆ இது என்ன கொடுமை! இராமபிரானைக் காட்டிற்கு விரட்டியதுமல்லாமல் பரதன் இங்கும் பெரும்படையைத் திரட்டிக்கொண்டு வந்துவிட்டானே! காட்டில் வசிக்கவும் இராமனுக்கு இடம் இல்லையா! இக்கானகம் அனைத்தும் எனக்குரியதன்றோ! பரதன் இராமனுக்கு என்ன தீங்கு செய்ய முடியும்! பார்ப்போம்! பார்ப்போம்!

[குகன் வேடுவரைப் பெருங்கூச்சலிட்டு அழைக்கிறான். வேடுவர் அனைவரும் கருமேகங்களைப் போலக் கையில் விற்களைத் தாங்கி வந்து குகனை வணங்கி நிற்கின்றனர்.]

வேடுவர்கள்: [ஒரே குரலில்] தலைவரே, ஏன் உமது உடல் துடிக்கிறது? கண்களில் தீப்பறக்கிறதே! உம்மை எதிர்க்க உலகில் ஒரு வேந்தனும் உண்டோ! மறவர்தாம் உண்டோ! எதனால் இப்பதற்றம்? உடனே சொல்லும்! இதோ ஒரே நொடியில் உம் பகைவர்களைச் சிறை பிடித்து வந்து உம்முன் நிறுத்துகிறோம்!

குகன்: (கோபத்துடன் பற்களை நறநறவென்று கடித்துப் புருவம் நெரிய) மறக்குல வீரர்களே, எனக்கு ஒன்றுமில்லை; ஆயினும், என்னைத் தம்பி என்று அன்பு காட்டி, "என் மனைவி உன் கொழுந்தி," என்று ஆர்வ மொழிகள் கூறிய இராமபிரானை எதிர்த்துப் போரிடப்

பெரும்படையைத் திரட்டிக்கொண்டு பரதன் வருகிறான். அதோ பாருங்கள்! என் உயிர் சென்ற பின்புதான் பரதன் கங்கையின் கரையைக் கடக்க முடியும்! நான் வேடுவன் என்றால்தான் என்ன! வேடுவர் அம்பு, அரசர் மார்பைத் துளைக்காதோ! பரதன் பெரும்படை எல்லாம் அரவம் முன்னர் எலிப்படை போல என் கை அம்பு ஒன்றாலே மாய்ந்தழியும்! என் உயிர்த்தோழன் இராமபிரான் அன்று கூறிய அன்பு மொழிகள் என் உள்ளத்தைக் கவர்ந்தன. அத்தகைய பெரியோனுக்கு ஒரு துன்பம் வருவதைப் பார்த்துக்கொண்டு நான் வாளாவிரேன். நீங்கள் உடனே சென்று வடகரையில் உள்ள நம் ஓடங்களையெல்லாம் இக்கரையில் கொண்டு வந்து சேருங்கள்.

[வேடர்கள் ஓடங்களை வடகரை சேர்க்கப்போகின்றனர். குகன் சற்றுக் கோபம் தணிந்து பரதனைக் கூர்ந்து கவனிக்கிறான். அவன் கண்முன் பரதன் இராமனைப்போலவே காணப்படுகின்றான். குகன் உடனே ஓர் ஓடத்தில் ஏறித் தென்கரையை நோக்கி வேகமாய்ச் செல்கின்றான்.]

## காட்சி—II

| | |
|---|---|
| **இடம் :** | கங்கையின் வடகரை |
| **காலம் :** | முற்பகல் |
| **பாத்திரங்கள் :** | பரதன், சுமந்திரர், குகன். |

**பரதன் :** சுமந்திரரே, அதோ கங்கை நதியில் நம்மை நோக்கிக் கலத்தில் வருபவன் யார்?

சுமந்திரர்: பரதா, அவன் இக்கானகத்தின் தலைவன்.

பரதன்: அவன் பெயர் என்ன?

சுமந்திரர்: அவன் பெயர் குகன் என்பது. உன் தமையன் இராமனுக்கு அவன் உயிர்த் தோழன். உன்னைக் காணவே இங்கு அவசரமாய் வருகிறான்.

பரதன்: அவன் வருவதற்கு முன் நாமே கரையோரம் சென்று எதிர் கொண்டு அழைப்போம்.

*[சுமந்திரரும் பரதனும் குகன் வந்து இறங்கிய துறையை அடைகின்றனர்.]*

குகன்: (தன்னை எதிர் நோக்கி வரும் பரதனைக்கண்டு திடுக்கிட்டுத் தனக்குள்) ஆ! இவன் இராமபிரானைப் போல அல்லவா இருக்கின்றான்! இவனும் மரவுரி தரித்திருக்கின்றானே! இவன் சரீரம் வாடி மாசடைந்தல்லவா இருக்கிறது! கலையிழந்த சந்திரனைப் போன்ற முகத்தில் நகை தவழவில்லையே! இவன் துயரத்துக்கு ஈடு என்னால் சொல்ல முடியுமா? கல்லும் கரையும் வண்ணம் அழுகிறானே! பரதா, பரதா, நான் உன்னை அறியாது போனேன்! .... ஆம் .... இராமபிரானின் பின் பிறந்தவர்கள் பிழை செய்வார்களா! நான் கிராதன்!

*[கண்களில் நீர் பெருகக் கையிலிருந்த வில் தரையில் நழுவி வீழப் பரதனை வணங்குகிறான். பரதனும் குகனைத் தழுவிக்கொள்கிறான்.]*

## பயிற்சி:

I. இந்நாடகத்தை வகுப்பு மாணவருடன் நடித்துக் காட்டு.

II. இராமன் வந்தான் — இறந்த காலம்
பரதன் வருகிறான் — நிகழ்காலம்
முருகன் வருவான் — எதிர்காலம்
இந்த மூன்று வினை முற்றுக்களையும் கவனி. வந்தான் என்பது காரியம் நடந்துவிட்டதைத் தெரிவிக்கிறது. வருகிறான் என்பது காரியம் நடக்கின்றதைத் தெரிவிக்கிறது. வருவான் என்பது காரியம் நடக்கப் போவதைத் தெரிவிக்கிறது.

III. இப்பாடத்தில் வந்துள்ள முக்கால வினை முற்றுக்களையும் எடுத்து வரிசையாக எழுது.

## கேள்விகள்:

1. பரதனைக் கண்டதும் குகன் தவறாகக் கருதியது என்ன?
2. குகன் வேடுவர்களை எதன்பொருட்டு அழைக்கிறான்?
3. குகன் இராமபிரானிடம் வைத்துள்ள அன்பு எதனால் தெரிகிறது?
4. பரதன் நிலையைக் குகன் எவ்வாறு உணர்ந்தான்?

---

# 15. தென்சிங்கு

1. நம் நாட்டின் வடக்கே உள்ளது இமய மலை. அதன் பல சிகரங்களில் உயர்ந்தது எவ-ரெஷ்டு சிகரம். அது சுமார் 29,000 அடிகள் உயர-முடையது. அதனை அடையப் பலர் பல முறை முயற்சி செய்திருக்கின்றனர். விடாமுயற்சி காரண-




மாகச் சமீபத்தில் ஒரு குழுவினர் அந்தச் சிகரத்தை அடைந்துவிட்டனர். அவர்களுடன் பங்கெடுத்துக்-கொண்ட முக்கியமானவர் தென்சிங்கு என்பவர். அவர் வாழ்க்கையைப் பற்றி நாம் தெரிந்துகொள்-வது அவசியம்.

2. தென்சிங்கின் முழுப்பெயர் தென்சிங்கு நார்க்கே என்பதாகும். அவர் இந்தியாவிற்கு வட-கிழக்கேயுள்ள நேப்பாளத் தேசத்தில் பிறந்தவர்;

ஆயினும், 1933-ஆம் ஆண்டில் இந்தியாவில் வந்து குடியேறினர்; டார்ஜீலிங்கு மாவட்டத்தைச் சேர்ந்த தூான்ஸானங்கு என்னும் கிராமத்தில் வசித்து வந்தார். அவர் இளமையிலிருந்தே மலைக்காட்சிகளைக் கண்டு மகிழ்வார்; குன்றுகளின் மீது ஏறி ஓடி விளையாடுவார்; மலை ஏறுவதில் அவருக்கு விருப்பம் அதிகம்.

3. வாலிபப் பருவம் அடைந்ததும், தென்சிங்கு ஒருநாள் பெற்றோரிடம் சொல்லாமல் வீட்டை விட்டு ஓடிவிட்டார். இமயமலையின் சிகரத்தைக் கண்டுபிடிக்கச் செல்லும் ஒரு குழுவில் அவர் ஒரு சாதாரணக் கூலியாளாய் அமர்ந்தார். அப்பொழுது அவர் டார்ஜீலிங்கு வாசியாகிய ஆங்லஹ்மு என்னும் அம்மையாரை மணந்துகொண்டார்; மலையேறும் குழுவினருக்கான கூலி வேலைகளை இழிவாகக் கருதாமல் செய்து வந்தார். அவ்வாறு மலை ஏறுபவர்களுடன் அடிக்கடி சென்றது காரணமாக, மலையேறும் தந்திரங்கள் பலவற்றையும் அவர் எளிதில் கற்றுக்கொண்டார். அப்பயிற்சிகளே அவர் எவரெஸ்டு உச்சியை அடைவதற்கும் அனுகூலமாய் இருந்தன.

4. அவர் பள்ளிக்கூடத்தில் படிக்கவில்லை. ஆயினும், அனுபவமே அவருக்குச் சிறந்த படிப்பினை அளித்தது. 1935-ஆம் ஆண்டில் எவரெஸ்டு சிகரத்தைக் கண்டு பிடிக்கும் குழுவினருடன் அவரும் சென்றார்; 24,000 அடி வரையிலும் ஏறிவிட்டார்.

5. இதைப் போன்ற பல முயற்சிகளிலும் அவர் பங்கெடுத்துக்கொண்டார். தோல்விகள்

அவருக்கு மனத்தளர்ச்சி அளிக்கவில்லை; ஆனால், மேன்மேலும் முயற்சி செய்யவே தூண்டுதலாயிருந்தன. எப்படியும் எவரெஷ்டு சிகரத்தை அடைய வேண்டும் என்னும் எண்ணம் அவர் உள்ளத்தில் ஊன்றிவிட்டது. ஆகவே, அவர் மீண்டும் முயற்சி செய்தார். 1952-ஆம் ஆண்டில் செய்த முயற்சியில் 28,000 அடித்தூரம் சென்றார்; பிராணவாயு சாதனமில்லாமையால் அதற்குமேல் அக்குழுவினர் செல்ல முடியவில்லை.

6. கடைசியாக 1953-ஆம் ஆண்டில் மே மாதக் கடைசியில் தென்சிங்கு ஒரு பிரிட்டிஷ் குழுவினரோடு சென்று, எவரெஷ்டு சிகரத்தில் பாரதக் கொடியைப் பெருமையுடன் நாட்டிப் பறக்கவிட்டார். உடனே அவர் புகழ் உலகமெங்கும் பரவியது. அவருக்கு எங்கும் வரவேற்புகள் அமோகமாய் நடந்தன. அவருக்கு ஏற்பட்ட புகழ் அவர் வளர்ப்பு இடமான இந்தியாவிற்கும் ஏற்பட்டதே! இந்திய ஜனாதிபதியாகிய இராசேந்திர பிரஸாது அவருக்கு ஒரு தங்கப் பதக்கம் பரிசு வழங்கினார்.

7. தென்சிங்கு குடும்ப வாழ்க்கை மிகவும் எளியது. அவர் புத்த சமயத்தைச் சேர்ந்தவர்; லாகிரி வஸ்துக்களை உபயோகியாதவர்; தம் மனைவியாரிடத்தும் தம் இரு புதல்வியரிடத்தும் மிகவும் அன்பு பாராட்டுகிறார்; உலகப் புகழ் பெற்ற பிறகும், ஆடம்பரமற்ற வாழ்க்கையே நடத்துகிறார். அவரது தளராத முயற்சியும், அஞ்சாத நெஞ்சமும் அவரது வெற்றிக்குக் காரணமாகும். எவ்விதக் கஷ்டத்திலும் மனந்தளராமல் விடாமுயற்சியுடையவர் கடைசியில் வெற்றி பெறுவர் என்பதற்குத் தென்சிங்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாவர்.

புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| இமயமலை | சிகரங்கள் | எவரெஷ்டு |
| விடா முயற்சி | குழுவினர் | டார்ஜீலிங்கு |
| மாவட்டம் | குன்றுகள் | வாலிபப் பருவம் |
| தூன்ஸுங்கு | காட்சிகள் | பெற்றோரிடம் |
| கோஷ்டி | சாதாரணம் | இழிவாக |
| தந்திரங்கள் | அனுபவம் | மனத்தளர்ச்சி |
| ஊன்றி | பிராணவாயு | சாதனம் |
| குழுவினர் | பாரதக் கொடி | ஜனதிபதி |
| தங்கப் பதக்கம் | பரிசாக | ஆடம்பரம் |
| அஞ்சாத | தளராத | எடுத்துக்காட்டு |

பயிற்சி :

I. (1) கீழ் வரும் சொற்களை வாக்கியத்தில் அமை :—
ஆடம்பரம், அனுபவம், வரவேற்பு, எடுத்துக் காட்டு.

(2) எதிர் மொழி கூறு :—
சிகரம் × ———
ஏறுவது × ———
உயரம் × ———
ஊக்கம் × ———.

(3) இப்பாடத்தில் வந்துள்ள எதிர்கால வினைமுற்றுக்களை எடுத்து எழுது.

II. (1) தென்சிங்கு மலைச் சிகரத்தைக் கண்டார்.
அவர் வீட்டை விட்டுச் சென்றார்.

—இவ்வாக்கியங்களில் வந்துள்ள வினைமுற்றுக்கள் ஒரு காரியம் நடந்ததைத் தெரிவிக்கின்றன. ஆகையால், இவை உடன்பாட்டு வினை முற்றுக்கள் எனப்படும்.

(2) பலர் மலைச் சிகரத்தைக் கண்டிலர்.
பலர் மலையுச்சிக்குச் சென்றிலர்.

இவ்வாக்கியங்களில் வந்துள்ள வினை முற்றுக்கள் ஒரு காரியம் நடவாததைத் தெரிவிக்கின்றன. ஆகையால், இவை எதிர்மறை வினை முற்றுக்கள் எனப்படும்.

(3) இப்பாடத்தில் வந்துள்ள உடன்பாட்டு வினை முற்றுக்களை எதிர்மறை வினை முற்றுக்களாக மாற்று.

### கேள்விகள் :

1. எவரெஷ்டு சிகரம் எத்தனை அடி உயரமுடையது?
2. தென்சிங்கு எங்குப் பிறந்தவர்?
3. அவர் எங்குக் குடியேறி வாழ்ந்தார்?
4. தென்சிங்குக்கு எதில் அதிகப் பிரியம்?
5. அவர் வீட்டை விட்டு எங்குச் சென்றார்? யாரை மணந்தார்?
6. அவர் மலையேறும் பயிற்சியை எவ்விதம் பெற்றார்?
7. தென்சிங்கு எப்போது எவரெஷ்டு உச்சியை அடைந்தார்?
8. அவருக்கு யார் தங்கப் பதக்கம் அளித்தவர்?
9. தென்சிங்கின் நற்குணங்கள் எவை.
10. தென்சிங்கு எதற்கு எடுத்துக்காட்டாய் விளங்குகிறார்?

---

## 16. கடிதங்கள்

### 1. அழைப்புக்கடிதம் :

3, வீட்கிராப்டு ரோடு,
நுங்கம்பாக்கம், 30-9-55
சென்னை—6.

அன்புள்ள அம்மாள் அவர்களுக்கு,

வணக்கம்! இங்கு நாங்கள் எல்லோரும் நலமாயிருக்கிறோம். அங்குத் தந்தையார், தங்கை விமலா, தம்பி கிரி ஆகியவர் நலம் அறிய விரும்புகிறேன்.

அக்டோபர் மாதம் 6-ஆம் தேதி நம் மனோகரனுக்கு முதற்பிறந்த தினம் வருகிறது. அதற்கு நீங்களும் தந்தையாரும், குழந்தைகளுடன் தவறாமல் வரும்படி கேட்டுக்கொள்கிறேன். அத்தையும் மாமாவும் அந்த நாளை விசேஷமாகக் கொண்டாட ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

உங்கள் அன்புள்ள,
த. ராஜகுமாரி.

திருவாட்டி சி. விட்டோபாய்,
பெருநகர்,
உத்திரமேரூர், (வழி) செங்கற்பட்டு ஜில்லா.

## 2. வாணிபக் கடிதம் :

82, நெல்லுக்காரத் தெரு,
காஞ்சீபுரம், 15-8-55.

நிருவாகர்,
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்,
பவழக்காரத் தெரு, சென்னை-1

அன்புடையீர்,

தயவு செய்து கீழே குறிக்கப்பட்டுள்ள புத்தகங்களை எனது முகவரிக்கு வி. பி. பி யில் அனுப்பும்படி வேண்டிக்கொள்ளுகிறேன் :

1. ஆங்கிலத் தமிழ் அகராதி — 1 பிரதி
2. திருக்குறள்—ஆங்கில மொழி பெயர்ப்புடன் — 1 பிரதி

உங்கள் உண்மையுள்ள,
மு. அன்பழகன்

நிருவாகர் அவர்கள்,
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்,
பவழக்காரத் தெரு, சென்னை-1.

## 3. வேண்டுகோள் கடிதம் :

போர்டு உயர்நிலைப்பள்ளி,
பெருநகர், 1-10-55.

அன்பு மிக்க ஐயன்மீர்,

வணக்கம்! எங்கள் பள்ளி மாணவர் சங்கத்தின் ஆண்டு விழா, இம்மாதம் 9-ஆம் நாள் வெள்ளிக்கிழமை நடைபெறும். அவ்விழாவிற்குத் திருவாளர் தி. புருஷோத்தம முதலியார், எம். எல். ஸி. அவர்கள் தலைமை வகிக்க இசைந்துள்ளார்கள். நீங்கள் அவ்வமயம் வந்திருந்து, 'திருக்குறளின் பெருமை' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவு ஆற்றுமாறு மிகவும் பணிவுடன் உங்களை வேண்டிக்கொள்கிறேன்.

அன்பன்,
போ. அருணகிரி,
செயலாளன்.

திருவாளர் வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்,
38, திருப்பூக்குடல் தெரு,
பெரிய காஞ்சீபுரம்.

## பயிற்சி :

I 1. இசைந்து + உள்ளார்
காற்று + அடித்தது
இவற்றைப்போலக் கீழ் வரும் சொற்றொடர்களைப் பிரித்துக்காட்டு :—
அன்பளிப்பு, சென்றமை, உருண்டோடிற்று.

(2) சேர்த்து எழுது :—
விருந்து + உண்டான் =
கரும்பு + ஒடித்தான் =
கண்டு + எழுந்தான் =
வந்து + அமர்ந்தான் =

II (1) கீழ்வரும் எச்சங்களின் பெயரைக் குறிப்பிடு :—
வந்து, சென்ற, வரும், ஓடி, ஆடின, கண்டு, மென்று, ஒடிந்த.

2. மேலே உள்ள எச்சங்களுக்கு உரிய பெயரை யாவது வினைமுற்றையாவது சேர்.
(உ - ம்:) தேடிச் சென்றான்.
கண்ட பையன்.

## கேள்விகள் :

1. 'வேண்டுகோள் கடிதம்' என்பது யாது?
2. 'வாணிபக் கடிதம்' என்பது யாது?
3. 'அழைப்புக் கடிதம்' என்பது யாது?
4. கடிதம் எழுதும் போது கவனிக்க வேண்டுபவை எவை?

---

# 17. பெரியோர் உரை நடை

நாம் பாடபுத்தகங்களைப் படிப்பதோடு நில்லாமல் சிறந்த அறிஞர்கள் எழுதியுள்ள கட்டுரைகளையும், உரை நடைகளையும் கவனித்துப் படிக்க வேண்டும். அறிஞர்கள் எழுதும் உரை நடையின் போக்கை உணரவேண்டும்; அதில் உள்ள அருஞ்சொற்களின் பொருளையும் ஆசிரியர் மூலம் கேட்டு அறிய வேண்டும். சிறந்த கருத்துக்களைப் பொன் போலப் போற்றி நம் கட்டுரைகளில் ஏற்றவிடத்தில் அமைக்கவேண்டும். இப்படிச் செய்தால், நல்ல உரை நடை எழுதும் பயிற்சி நமக்கு எளிதில் உண்டாகும்.

இங்குச் சிறந்த அறிஞர் இருவர் கட்டுரைகள் தரப்பட்டுள்ளன. அவற்றை நன்கு படித்துப் பயன் அடையலாம்.

## 1. இசை இன்பம்

நம் நாட்டு மொழியாகிய தமிழோ, இயற்கையிலே இனிமை வாய்ந்தது. இசைக்குப் பெரிதும் ஏற்றதொன்று; இனிய சொற்களும் தொடர்களும் இசையில் அமைந்து கேட்பவரைப் பரவசப்படுத்தும் இயல்பின. இதனலன்றோ, அப்பர் தமது தேவாரத்தில் "தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" என்றருளினர்? நாளடைவில் தமிழிலுள்ள இசைப் பாடல்கள் எடுத்தாளப்படாமையினலும், புதியன ஆக்குவதற்கு ஊக்கம் காட்டுவாரின்மையினலும் தமிழ்ப்பாடல் குறைந்து வர, வேற்று மொழிப் பாடல்களே விஞ்சி நின்றன. பிறமொழிப் பாடல்களை வரவேற்றுத் தம்மொழிப்

பாடல்களைப் புறக்கணிக்கும் இயல்பு தமிழர்கள் இடையே பெருகி வரலாயிற்று.

—பண்டிதமணி மு. கதிரேசஞ்செட்டியார்

## 2. சமூக சீர்திருத்தம்

சமூக சீர்திருத்தம் நல்லது; அவசியங்கூட. ஆனால், அதைச் செய்யும் பொழுது நாம் துவேஷம், கோபம் முதலியவைகளை அறவே துறந்துவிட வேண்டும். சீர்திருத்தத்தில் மட்டுமே நாம் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும். இந்த விஷயத்தில் நாம் நமது பெருமையைப் பொருட்படுத்தலாகாது........பிறர் என்னை வைதால், நானும் அவர்களை வையவெண்டுமென்ற அவசியம் இல்லை. மற்றவர்கள் பொறுமையற்றவர்களாயிருந்தால், அது தவறு என்று குறை கூறுவது நமது கடமை என்று நாம் எண்ணிவிடலாகாது. பிறர் பொறுமை இல்லாமலிருந்தால் என்ன? நாம் பொறுமையோடிருப்போம். பிறர் பொறுமை இழந்தால் அதற்காக நாம் கவலைப்பட வேண்டா. சர்வலோக சஞ்சீவியாகிய அன்பைப் பயன்படுத்துவோம். அது அற்புதமாகக் குணப்படுத்திவிடும்.

சிலர் மதத்தையே அழித்துவிட விரைகிறார்கள். மதம் முற்றிலும் பயனற்றதும், பொய்யானதும் ஆகிவிடுமானால், பாம்பு சட்டை கழற்றுவது போல அதை அழித்துவிட வேண்டுவது அவசியந்தான். ஆனால், பாம்பு சட்டையை நீக்கிவிடுகிறதே அன்றி அது இறந்து போவதில்லை. அது போல மதத்தில் உள்ள அழுக்குகளை நீக்கிவிட வேண்டுமே அன்றி, மதத்தை அழித்துவிட வேண்டுவதில்லை.

—சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியார்

பயிற்சி :

I. நான் படித்தேன் — தன்மை ஒருமை வினைமுற்று
நாங்கள் படித்தோம் — ,, பன்மை வினைமுற்று.
நீ படித்தாய் — முன்னிலை ஒருமை வினைமுற்று.
நீர் வந்தீர் — } ,, பன்மை வினைமுற்று.
நீங்கள் வந்தீர்கள் — }
அவன் வந்தான் — படர்க்கை ஆண் பால் வி. மு.
அவள் வந்தாள் — ,, பெண்பால் வி. மு.
அது வந்தது — ,, ஒன்றன்பால் வி. மு.
அவை வந்தன — ,, பலவின்பால் வி. மு.

II. கீழ் வரும் வினைமுற்றுக்களுக்கு இடமும் பாலும் குறிப்பிடுக :—

| | |
|---|---|
| எலி ஓடிற்று. | குமாரி பாடினாள். |
| பசுக்கள் வந்தன. | அவர்கள் வந்தார்கள். |
| இராமன் படித்தான். | நாங்கள் உண்டோம். |
| நீங்கள் வந்தீர்கள். | நீ படித்தாய். |

கேள்விகள் :

1. பெரியோர் எழுதிய உரைநடை பயில்வதனால் உண்டாகும் நன்மை என்ன ?
2. தமிழிசையின் சிறப்பை ஆசிரியர் எவ்விதம் கூறுகிறார் ?
3. தமிழிசை வீழ்ச்சிக்கு ஆசிரியர் காட்டும் காரணங்கள் எவை ?
4. ராஜாஜி கூறும் சமூக சீர்திருத்தம் யாது ?
5. சர்வலோக சஞ்சீவி எது ?
6. மதத்தை எப்படிச் சீர்திருத்தலாம் ?

# 18. நட்பின் பயன்

1. ஓர் ஊரில் எலி, காக்கை, ஆமை, மான் இவை நான்கும் நட்பாயிருந்தன. அவை ஒன்றுக்கொன்று உதவி புரிந்து வாழ்ந்தன. ஆமை வேகமாகச் செல்ல வேண்டி இருக்கும் பொழுது மான் அதனைத் தூக்கிச் செல்லும்.

2. அந்நான்கும் நெருங்கி வாழ்வதற்கு, ஒரு தகுந்த இடத்தைத் தேடின. அதற்காக நெடுந்தூரம் தேடிக் கடைசியில் அவை ஒரு காட்டை அடைந்தன; அங்கு ஒரு தெளிவான ஓடையைக் கண்டன. அடர்ந்த மரங்களும் அங்கு இருந்தன. மரத்தில் காக்கை தன் கூட்டைக் கட்டிக்கொண்டது. மான் அருகிலுள்ள புதரில் வாழ்ந்தது. அதற்குத் தேவையான புல்லும் ஏராளமாகக் கிடைத்தது. ஆமை ஓடையில் வாழ்ந்தது. அங்கு ஒரு வளையில் எலி வசித்தது.

3. நெடுநாள் வரை அந்நான்கும் சந்தோஷமாய் வாழ்ந்து வந்தன. ஆயினும், அவை எப்பொழுதும் எச்சரிக்கையாகவே இருந்தன. சிறிது அபாயக்குறி ஏற்பட்டாலும் அவை உடனே தத்தம் இடத்திற்குச் சென்றுவிடும்.

4. ஒரு நாள் வேடன் ஒருவன் அங்கு வந்து, தன் வலையை வீசி மறைந்திருந்தான். மான் அதைக் கவனியாமல் சென்று மேய்கையில் வலையில் சிக்கிக்கொண்டது; எவ்வளவு முயன்றும் அதனால் தப்ப முடியவில்லை. அதன் கூச்சல் மற்ற மூன்றையும் அங்கு வரச் செய்தது. எலி வலையை அறுக்க முயன்றது. அதற்குள் வேடன் வருவதை நான்கும் கண்டன; காலதாமதம் செய்வதில் பய-



னில்லை என்னும் முடிவுக்கு வந்தன. காகம் மானை விடுதலை செய்ய அதன் காதில் ஓர் உபாயம் கூறிற்று.

5. அதன்படி மான் இறந்துவிட்டதைப் போலத் தரையில் வீழ்ந்து கிடந்தது. காகம் இறந்த மானைக் கொத்துவதைப் போல அதன் தலையில் உட்கார்ந்து அதன் கண்ணைக் கொத்திக்-கொண்டிருந்தது. ஆமை ஓடையின் ஓரம் சென்று வெயில் காய்ந்துகொண்டிருந்தது. எலி மானுக்-கருகில் புல்லில் ஒளிந்துகொண்டது.

6. வேடன் நெருங்கியதும் காகம் மரத்தின் கிளையின்மேல் உட்கார்ந்துகொண்டது. வேடன் மான் இறந்துவிட்டது என்று எண்ணி வலையின் கயிறுகளை அறுத்தான். அதற்குள் ஓடையின் ஓரத்தில் ஆமை இருப்பதை அவன் கண்டான்.

அதையும் பிடிக்கலாமென்று நினைத்து மெதுவாக அதனிடம் சென்றான். அவன் சிறிது தூரம் சென்றதும் காக்கை "காகா" என்று கரைந்தது. அதைக் கேட்டதும் மான் துள்ளிக்குதித்து ஓடிற்று. வேடன் ஏமாந்து நின்றான். ஆமையும் நீருக்குள் மறைந்துவிட்டது. மிக்க வருத்தத்துடன் வேடன் வீடு திரும்பினான். பிறகு அவை நான்கும் சந்தோஷமாய் வாழ்ந்தன.

"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு."

### புதிய சொற்கள் :

| | | |
|---|---|---|
| நட்பு | ஒன்றுக்கொன்று | ஓடை |
| அடர்ந்த | வளை | எச்சரிக்கை |
| அபாயம் | இறைச்சி | கவனியாமல் |
| காலதாமதம் | வலையில் | உபாயம் |
| பயனில்லை | முயன்றது | துள்ளி |

### பயிற்சி :

I. (1) கீழ் வரும் சொற்களை வாக்கியத்தில் அமை :— காலதாமதம், எச்சரிக்கை, துள்ளிக்குதித்து, முயன்று.

(2) இப்பாடத்தில் வந்துள்ள வினை முற்றுக்களை எடுத்து எழுதி, திணை, பால், எண், இடம் கூறு.

(உ - ம்:) மான் துள்ளிக் குதித்து ஓடிற்று. ஓடிற்று — அஃறிணை, ஒன்றன்பால், ஒருமை எண், படர்க்கை இடம்.

கேள்விகள் :

1. எலியும், காகமும், மானும், ஆமையும் எங்குப் போய் வாழ்ந்தன ?
2. மானுக்கு வந்த துன்பம் யாது ?
3. மற்றவை எவ்வாறு உதவி செய்துகொண்டன ?
4. வேடன் எதனால் ஏமாற்றம் அடைந்தான் ?
5. இக்கதையால் நீ அறியும் நீதி என்ன ?

---

# 19. தீக்குச்சி செய்தல்

1. ஆதி காலத்தில் மனிதன் காடுகளிலும், மலைக்குகைகளிலும் வசித்து வந்தான். அவன் தான் கொன்ற விலங்கு, பறவைகளின் இறைச்சியைப் பச்சையாகவே தின்று வாழ்ந்து வந்தான். நாளடைவில் தீயின் உபயோகம் தெரிய வந்தது. காடுகளில் மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்ந்து தீப்பற்றி எரியும். கற்களை உடைக்கும் பொழுதும் தீப்பொறி கிளம்பும். இவற்றைக் கண்ட பூர்விக மனிதன், தன் அறிவினால் தனக்குத் தீ உபயோகப்படும் பொருள் என்பதை உணர்ந்தான் ; குளிரைப் போக்குவதற்கும், மாமிசத்தைச் சுட்டு ருசியுடன் உண்பதற்கும் தீ உதவியாகுமெனக் கருதினான்; சிகிமுகிக் கல்லினின்றும் தீயுண்டாக்கும் விதத்தையும் அறிந்தான்.

2. பண்டைக்காலத்தில் ஒருமுறை உண்டாக்கிய தீயை எடுத்துச் செல்வர். பின்பு தீயின் பெரும்பயனை மனிதர் ஆராய்ச்சியின் மூலம் அறியலாயினர். உலோகங்களை உருக்கவும் அதினின்றும் பல வகை இயந்திரங்களைச் செய்யவும் மனிதர் தம் அறிவினால் நாளடைவில் அறிந்துகொண்டனர்.

இக்காலத்தில் ஏற்பட்டுள்ள பல வகை விஞ்ஞான முன்னேற்றங்கள் தீயின் உபயோகத்தினால் ஏற்பட்டவைகளே ஆகும்.

3. நாளடைவில் தீயை மூட்டிப் பாதுகாப்பதைவிடத் தீக்குச்சியின் மூலம் தீயை உண்டாக்கும் முறை கண்டு பிடிக்கப்பட்டது. இக்காலத்தில் தீக்குச்சி இல்லாத இடமே இல்லை. அரை அணுவிற்கும், முக்காலணுவிற்கும் தீக்குச்சிப்பெட்டிகள் கிடைக்கின்றன. தீக்குச்சிப்பெட்டி ஒவ்வொருவருக்கும் தினசரி வாழ்க்கையில் அத்தியாவசியமானது. காலையில் வீட்டில் அடுப்பை மூட்டுவதற்கும், மாலையில் விளக்கேற்றுவதற்கும் தீக்குச்சி தேவை. அவ்வளவு உபயோகமான ஒரு பொருள் நம் நாட்டிலும் இப்பொழுது செய்யப்பட்டு வருவது நமக்குப் பெருமையை அளிக்கும். தீக்குச்சி செய்தல் ஒரு சிறந்த கைத்தொழிலாகும். அது எவ்வாறு செய்யப்படுகிறது என்பதை அறிவது அவசியம்.

4. தீக்குச்சி செய்வதற்கு அவசியமான பொருள் பாஸ்வரம். அது இருவகைப்படும். ஒன்று மஞ்சள் நிறமுள்ளது; மற்றொன்று, சிவப்பு நிறமுள்ளது. அது தானாகவே பற்றி எரியும் தன்மையுடையது. ஆகையால், அதைக் குளிர்ந்த இடத்திலேதான் வைக்க வேண்டும். பாஸ்வரத்தோடு கந்தகப் பொடியைச் சேர்க்க வேண்டும். இவை இரண்டும் தீ உண்டாக்கும் தன்மையுடையவை.

5. தீக்குச்சியும் தீப்பெட்டியும் செய்வதற்கு மிக மென்மையான ஜாதிக்காய்ப்பலகை தேவை. அம்மரம் நம் நாட்டிலும் உண்டு. அது வெகு சீக்கிரத்தில் தீப்பற்றும் தன்மையுடையது. அம்மரத்தை இயந்திரங்களின் உதவியால் தீக்குச்சிகளாகவும்,

தீப்பெட்டிகளாகவும் செய்வார்கள். பிறகு கந்தகப் பொடியைப் பாஸ்வரத்துடனும் வச்சிரப்பசை நீருடனும் கலப்பார்கள். தீக்குச்சியின் ஒரு நுனியை ஓரளவு அக்குழம்பில் தோய்த்து உலர வைப்பார்கள். குச்சியில் மருந்து ஒட்டி நன்ருகக் காய்ந்த பிறகு தீப்பெட்டிகளில் அவை அடுக்கப்படும். இவை யாவும் இயந்திரங்களின் உதவியினுலேயே தயாரிக்கப்படுகின்றன.

6. தீப்பெட்டியின் இரு புறமும் பாஸ்வர மருந்து தடவப்படுகின்றது. அதன்மீது தீக்குச்சியைத் தேய்த்தால், உடனே தீ உண்டாகும். தீப்பெட்டியின்மீது அது தயாரிக்கப்பட்ட கம்பெனியின் விலாசம் ஒட்டப்படும். பின்பு அது விற்பனைக்கு அனுப்பப்படும்.

7. நாம் பலவகைத் தீப்பெட்டிப் படங்களைச் சேகரிப்பது ஒரு நல்ல விளையாட்டு. நம் நாட்டில் தீப்பெட்டிகள் தயாரிப்பதன்றிப் பல அன்னிய நாடுகளினின்றும் தீப்பெட்டிகள் அனுப்பப்படுகின்றன. நம் நாட்டில் சென்னையின் வடபாகத்தில் 'விம்கோத் தீப்பெட்டிச்சாலை' ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. அது மிகவும் பெரிய தொழிற்சாலை. எண்ணற்ற மக்கள் அதில் வேலை செய்கின்ருர்கள். மாணவர்கள் உல்லாசப் பிரயாணம் சென்று, அத்தொழிற்சாலை முறைகளைக் காண்பது நல்லது.

புதிய சொற்கள்:

| | | |
|---|---|---|
| ஆதி காலம் | குகை | நாளடைவில் |
| தீப்பொறி | அணைப்பது | தீக்குச்சி |
| முன்னேற்றங்கள் | தீப்பெட்டி | அத்தியாவசியம் |

| | | |
|---|---|---|
| தீ மூட்டுவது | பாஸ்வரம் | தானகவே |
| பற்றிக்கொண்டு | கந்தகப்பொடி | மென்மை |
| ஜாதிக்காய் | வச்சிரப்பசை | விற்பனை |
| அன்னியநாடு | தொழிற்சாலை | உல்லாசம் |

கேள்விகள் :

1. ஆதி மனிதன் தீ உண்டாவதை முதல் முதல் எவற்றின் மூலம் அறிந்தான்?
2. அவன் தீ உண்டாக்குவதற்குக் கையாண்ட முறை யாது?
3. தீ நமக்கு எவ்வெவ்வகையில் பயன்படுகிறது?
4. தீயினால் இயங்கும் எந்திரங்கள் எவை?
5. தீப்பெட்டி கண்டு பிடிப்பதற்கு முன் மக்கள் நெருப்பை எப்படி உண்டாக்கினார்கள்?
6. தீக்குச்சிகள் செய்யத் தேவையான பொருள்கள் எவை?
7. தீக்குச்சிகள் செய்யும் முறைகள் எவை?
8. சென்னையில் உள்ள தீப்பெட்டித் தொழிற்சாலையின் பெயர் என்ன?

பயிற்சி :

I. (1) தீக்குச்சியே தன் வரலாற்றைக் கூறுவது போலக் கட்டுரை எழுது.

(2) இப்பாடத்தின் முதல் பத்தியில் உள்ள வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கண்டு பிடி.

(3) இப்பாடத்தின் இரண்டாம் பத்தியில் உள்ள முற்று வினை, எச்ச வினைகளை எடுத்து எழுது.

(4) இப்பாடத்தில் வந்துள்ள பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், பண்புப்பெயர், தொழிற்பெயர்களைக் கண்டு பிடி.

(5) கீழ் வரும் வினை முற்றுக்களை எதிர்மறையாக மாற்று :—

கண்டான், வந்தான், ஓடினன், எழுதினன், கேட்டான், பாடிற்று, சென்றன.

II. கீழ் வரும் வினைச்சொற்களைப் பகுதி, விகுதி, இடை நிலையாகப் பிரித்துக் காட்டு :—

சென்றான், வருவார், ஆடினாள், உண்கிறார், உண்ணுகின்றார்.

---

# 20. தமிழன் சிறப்பு

தமிழன் என்றொரு இனமுண்டு:
தனியே அவற்கொரு குணமுண்டு;
அமிழ்தம் அவனுடை மொழியாகும்;
அன்பே அவனுடை வழியாகும். 1

அறிவின் கடலைக் கடைந்தவனும்;
அமிர்தம் திருக்குறள் அடைந்தவனும்;
பொறியின் ஆசையைக் குறைத்திடவே
பொருந்திய நூல்கள் உரைத்திடுவான். 2

சிற்பம் சித்திரம் சங்கீதம்
சிறந்தவர் அவனினும் எங்கேசொல்!
வெற்பின் கருங்கல் களிமண்போல்
வேலைத் திறத்தால் ஒளிபண்ணும். 3

மானம் பெரிதென உயிர்விடுவான் ;
மற்றவர்க் காகத் துயர்ப்படுவான் ;
தானம் வாங்கிடக் கூசிடுவான் ;
தருவது மேல்எனப் பேசிடுவான். 4

உத்தமன் காந்தியின் அருமைகளை
உணர்ந்தவன் தமிழன் பெருமையுடன்
சத்தியப் போரில் கடன்அறிந்தான்
சாந்தம் தவறாது உடனிருந்தான். 5

—நாமக்கல் கவிஞர்

கேள்விகள் :

1. தமிழன் குணங்கள் எவை ?
2. தமிழன் கலைப்பெருமைகளைக் கவிஞர் எப்படிக் கூறுகிறார் ?
3. தமிழனது உயர் தனிக் குணம் யாது ?
4. 'சத்தியப் போர்' என்பது என்ன ? அதில் தமிழன் எவ்வாறு நடந்துகொண்டான் ?

—

# செய்யுள் பாடம்

## I. நீதிப் பகுதி

### 1. வாக்குண்டாம்

அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா;—மடைத்தலையில்
ஓடுமீ னோட வுறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு. 1

கற்பிளவோ டொப்பர் கயவர்; கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே—விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். 2

நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால். 3

உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா;
உடன்பிறந்தே கொல்லும் வியாதி;—உடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்;
அம்மருந்து போல்வாரு முண்டு. 4

மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்;—மன்னற்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை; கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. 5

—ஔவையார்

## 2. நல்வழி

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. 1

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே?—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு 2

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை;—சிச்சீ !
வயிறு வளர்க்கைக்கு மான மழியாது
உயிர்விடுகை சால வுறும். 3

தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணங்கொடையால்
கண்ணீர்மை மாறாக் கருணையால்—பெண்ணீர்மை
கற்பழியா வாற்றால் கடல்சூழ்ந்த வையகத்துள்
அற்புதமா மென்றே யறி. 4

ஆன முதலில் அதிகஞ் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய், ஏழ்பிறப்பும் தீயனாய்,
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு. 5

—ஔவையார்

## 3. நீதி வெண்பா

தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா—தாமழன்மற்று
எங்கே பிறந்தாலும் எள்ளாரே; நல்லோர்கள்
எங்கே பிறந்தாலு மென்? 1

மென்மதுர வாக்கால் விரும்புஞ் சகம்;கடின
வன்மொழியி னாலிகழும் மண்ணுலகம்:—நன்மொழியை
ஓதுகுயில் ஏதங் குதவியது? கர்த்தபந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று? 2

ஈக்கு விடந்தலையில் எய்தும்;இருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே;—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே; துர்ச்சனருக்கு
அங்கமுழு தும்விடமே யாம். 3

கற்பூரம் போலக் கடலுப்பு இருந்தாலும்
கற்பூரம் ஆமோ கடலுப்பு? — பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ? புகல். 4

வருத்தவளை வேய்அரசர் மாமுடியின் மேலாம்;
வருத்த வளையாத மூங்கில் — தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து, மேதினியெல் லாந்திரிந்து,
தாழுமவர் தம்மடிக்கீழ்த் தான். 5

## 4. சதகம்

### சிறுமையிற்பெருமை :

சேற்றில் பிறந்திடுங் கமலமலர் கடவுள்து
திருமுடியின் மேலிருக்கும்;
திகழ்சிப்பி உடலில் சனித்தமுத்து அரசரது
தேகத்தின் மேலிருக்கும்;
போற்றியிடு பூச்சியின் வாயின்நூல் பட்டென்று
பூசைக்கு நேசமாகும்;
புகலரிய வண்டெச்சி லானதேன் தேவர்கொள்
புனிதஅபி டேகமாகும்;
சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழுகு அனைவர்க்குமாம்;
சாதியீ னத்தில் பிறக்கினும் கற்றோர்கள்
சபையின்மேல் வட்டமன்றோ?
மாற்றிச் சுரத்தினை விபூதியால் உடல்குளிர
வைத்தமெய்ஞ் ஞானமுதலே!
மயிலேறி விளையாடு குகனே! புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே ! 1

குருபாத தாசர்] [குமரேச சதகம்

### செய்ய வேண்டுபவை :

வாலிபம் தனில்வித்தை கற்கவேண் டும்;கற்ற
வழியிலே நிற்கவேண்டும்;
வளைகடல் திரிந்துபொருள் தேடவேண் டும்;தேடி
வளர்அறம் செய்யவேண்டும்;
சீலமுடை யோர்களைச் சேரவேண் டும்;பிரிதல்
செய்யா திருக்கவேண்டும்;
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண் [டும்;கொண்டு
தியாகம் கொடுக்கவேண்டும்;

ஞாலமிசை பலதருமம் நாட்டவேண் டும்;நாட்டி
நன்ருய் நடத்தவேண்டும்;
நம்பனிணை அடிபூசை பண்ணவேண் டும்;பண்ணி
ஞளுமிகு பத்திவேண்டும்;
ஆலமமர் கண்டனே ! பூதியணி முண்டனே !
அநக!எம தருஸமமதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீச் சுரதேவனே ! 2

அம்பலவாணக் கவிராயர்] [அறப்பளீச்சுர சதகம்

## 5. விவேக சிந்தாமணி

### ஏழைக்குதவார் :

கதிர்பெறு செந்நெல் வாடக்
கார்க்குலம் கண்டு சென்று
கொதிதிரைக் கடலிற் பெய்யும்
கொள்கைபோல் குவல யத்தே
மதிதனம் படைத்த பேர்கள்
வாடினேர் முகத்தைப் பாரார் ;
நிதிமிகப் படைத்தோர்க் கீவார் ;
நிலையிலார்க்கு ஈய மாட்டார். 1

தண்டா மரையின் உடன் பிறந்தும்
தண்டேன் நுகரா மண்டூகம் :
வண்டே கானத் திடையிருந்து
வந்தே கமல மதுஉண் ணும் ;
பண்டே பழகி யிருந்தாலும்
அறியார் புல்லோர் நல்லோரை ;
கண்டே களித்தங் குறவாடித்
தம்மிற் கலப்பர் கற்ரேரே. 2

தீயோர்க்கு உபதேசம் தீமை பயக்கும் :

வானரம் மழைதனில் நனையத் தூக்கணம்
தானொரு நெறிசொலத் தாண்டிப் பிய்த்திடும்;
ஞானமுங் கல்வியும் நவின்ற நூல்களும்
ஈனருக்கு உரைத்திடில் இடரது ஆகுமே. 3

—பல புலவர்கள்

---

# II. கதைப் பகுதி

## 1. காகம் பகை வென்ற கதை

கோடுறு சினையில் காகம்
கூடுவைத்து அனேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே,
ஆடிய கரும்பாம் பொன்றுஅங்கு
அதுபெறும் முட்டை எல்லாம்
நாடியே குடித்துப் போட,
நலிந்துளம் மெலிந்து வாடி 1

தன்னுயிர்ப் பாங்கன் ஆன
சம்புகன் அருகு போய்,'இங்கு
என்னசெய் குவன்நான் ?' என்ன,
'இதைக்கொலல் அரிதோ! நீபோய்
மன்னவன் தேவி ஆடும்
மஞ்சனச் சாலை புக்குப்
பொன்னணி கொண்டு வந்து
போடுக பொந்தில்,' என்ன 2

காகம்அப் படியே செய்யக் காவலன் ஏவல் ஆளர்
ஏகிமா மரத்தின் பொந்தை ஈர்ந்தனர்; ஈரும் போதில்
நாகம்அங் கிருந்துசீற, நறுக்கினர் இருதுண் டாக;
ஆகையால் உபாயத் தாகா அருஞ்செயல் இல்லை அம்மா!

பஞ்சதந்திரப் பாடல்] [வீரமார்த்தாண்ட தேவர்

## 2. ஔவையாரும் இடைச்சிறுவனும்

வேனிற் பருவத்திலே — ஒருநாள்
வெய்யில் வேளையிலே,
ஞானத் தமிழ்க்கடலென்று — இந்த
நாடு புகழும்ஔவை 1

தூரம் மிகநடந்து — களைத்துச்
சோர்ந்து வரும்வழியில்
ஓரத்தில் ஓர்நாவல் — நிழலில்
ஒதுங்கிச் சற்றுநின்றாள். 2

அந்த மரமீதோர் — சிறுவன்
ஆநிரை மேய்க்கவந்தோன்,
சிந்தை மகிழ்ந்துநல்ல — கனிகள்
தின்று நிற்றல்கண்டாள். 3

'நாவ றளுதுஅப்பா! — நாலைந்து
நாவற் கனிபறித்துத்
தா,'என வேண்டவனும்
'தருவேன்,' என்றுசொல்லி 4

"சுட்ட கனிவேண்டுமோ? — அன்றிச்
சுடாத கனிவேண்டுமோ?
இட்டமுள்ள கனியைப் — பாட்டிநீ
இயம்பு,' எனக்கேட்டான். 5

கூறிய அம்மொழியால் — உள்ளம்
குழப்பம் எய்தி அப்பால்
தேறி அவளும், 'அப்பா! — சுட்ட
தீங்கனி தா,'என்ருள். 6

மெத்தப் பழுத்துஉலேந்து — கறுத்து
வெடித்த கனியாக,
பத்துப் பதினைந்தை — ஒன்ருய்ப்
பறித்து மண்ணிலிட்டான். 7

ஒட்டிய மண்நீங்கக் — கனியெடுத்து
ஊதி நிற்கையிலே,
'சுட்ட கனிஇது'எனச் — சிறுவன்
சொல்லி மறைந்திட்டான். 8

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை

---

## III. பல்சுவைப் பகுதி

### முருகன்—நிந்தா ஸ்துதி

தந்தை மலேயாளி; தாய்மாமன் மாட்டிடையன்;
வந்தஒரு மச்சானும் வாணியனே;—சந்ததமும்
விண்முகத்தை எட்டும்அயில் வேலேந்து பன்னிருகைச்
சண்முகற்குச் சாதியேது தான்? 1

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை

### சத்திரத்தில் சாப்பாடு

கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும்;—குத்தி

உலையிலிட ஊரடங்கும்; ஓர்அகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி யெழும். 2

## நாய்க்கும் தேங்காய்க்கும் சிலேடை

ஓடும் இருக்குமத னுள்வாய் வெளுத்திருக்கும்
நாடும் குலைதனக்கு நாணாது—சேடியே!
தீங்கான தில்லாத் திருமலைரா யன்வரையில்
தேங்காயு நாயுமெனச் செப்பு. 3

—காளமேகப் புலவர்

## பழக்கமும் பிறவிக்குணமும்

சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்;
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்;—நித்தம்
நடையும் நடைப்பழக்கம்; நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம். 4

—ஔவையார்

---

# அருஞ்சொற்பொருள் அகராதி

அங்கத்தினர் - உறுப்பினர்
அணி வகுப்பு-படை வகுப்பு
அணை - தடுப்புக்கரை
அத்தியாவசியம் - முக்கிய மானது
அபரிமிதமாக - அதிகமாக
அப்பர் - திருநாவுக்கரசர்
அரக்கர் - இராட்சசர்
அருஞ்சொற்கள் - கடின சொற்கள்
அலுவலகம் - காரியாலயம்
அவகாசம் - நேரம்
அற்புதம் - புதுமை
அன்னியர்-அயலார், வேறு நாட்டினர்
அஹிம்ஸை - துன்பம் செய்யாமை
ஆக்கம் - செல்வம்
ஆதி காலம் - பழங்காலம்
ஆதீனம் - மடம்
ஆர்க்கும் - ஒலிக்கும்
ஆர்வமொழி -அன்புமொழி
ஆழ்ந்து - ஊன்றி
ஆற்றுமாறு - செய்யுமாறு
ஆன்றோர் - பெரியோர், மேலோர்.
இசை - சங்கீதம்
இசைந்துள்ளார் - சம்மதித்துள்ளார்
இனம் - பிரிவு, கூட்டம்.
ஈடு - சமானம்
உணர்ந்தவன் -தெரிந்தவன்
உபாயம் - தந்திரம்
உரம் - எரு
உளம் - மனம்
உறுப்பு - அவயவம்
உறைவிடம் - தங்குமிடம்
ஊக்கம் - முயற்சி
ஊதியம் - சம்பளம்
ஊர்வது - நகருவது
எட்டாத - விளங்காத
எண்ணற்ற - கணக்கில்லாத
எல்லை - திசை
எழில் - அழகு
ஏவுதல் - கட்டளையிடுதல்
ஐயந்திரிபு அற-சந்தேகமும் மயக்கமும் நீங்க
ஓயாது - ஒழிவில்லாமல்
கடற்கண்ணி - கப்பலைத் துளையிட்டு அழிக்கும் கருவியைக் கொண்ட கப்பல்
கடன் - கடமை
கண்கூடு - பிரத்தியட்சம், கண்ணுக்குத் தெரிந்தது.
கரிசல் நிலம்-கருமண் நிலம்
கரும்பொன் - இரும்பு
கலம் - கப்பல்
கல்லூரி - காலேஜ்
கவடு - கிளை
கவர - அபகரிக்க
கவின் - அழகு
கனி - பழம்
கனிந்து - பழுத்து

கானம் - பாட்டு
கானவர் கோன் - வேடர் தலைவன்
கிராதன் - வேடன்
குவித்து - குவியலாக்கி
குழு - கூட்டம்
குறை - குற்றம்
குன்ற - குறையாத
குன்று - மலை
கொடை - தருமம்
கொழிக்கும் - ஒதுக்கும்
கோடு - மரக்கிளை
கோடை காலம் - வெயிற் காலம்
கோலம் - அழகு
சங்கம் - கழகக் கூட்டம்
சஞ்சீவி - சாவா மருந்து
சடைவு - சோர்வு
சமுதாயம் - மக்கள் கூட்டம்
சம்பவம் - நிகழ்ச்சி
சற்றும் - சிறிதும்
சாகரம் - கடல்
சாதனம் - கருவி
சாந்த மூர்த்தி - அமைதியான வடிவுடையவர்
சாந்தம் - அமைதி
சிகரம் - உச்சி, மலையுச்சி
சிந்திப்பார் - நினைப்பார்
சிப்பந்தி - உத்தியோகஸ்தர்
சிறை - காவல்
சிற்பம் - கல்லில் செதுக்கப் படும் உருவம்
சினம் - கோபம்
சினை - கிளை, முட்டை
சின்னம் - அடையாளம்
சீரிய கருத்து - சிறந்த எண்ணம்
செழிப்பு - வளம்
செவிலித்தாய் - வளர்ப்புத் தாய்
சேமித்து - சேர்த்துவைத்து
சொஸைட்டி - சங்கம்
சொற்பொழிவு - பிரசங்கம்
தணிய - குறைய
தத்துவம் - உண்மை
தருதல் - தருமம் செய்தல்
தாவரம் - மரஞ்செடிகொடிகள்
திரட்டி - தொகுத்து
திரவியம் - செல்வம்
தீட்டப்பட்டு - எழுதப்பட்டு
தீவிரம் - மும்முரம்
தீவினை - கெட்ட வினை
துவேஷம் - பகைமை
தேசிகர் - குரு
நலிந்து - வருந்தி
நள்ளிரவு - நடு இரவு
நன்செய் (நஞ்சை) - நெல், கரும்பு விளையும் நிலம்
நானிலம் - பூமி
நுண்ணறிவு - கூர்மையான அறிவு
பணியாற்ற - வேலை செய்ய
பண்டைக்காலம் - பழங் காலம்
பண்படுத்தி - செப்பம் செய்து

பதற்றம் - அவசரப்படுதல்
பதிப்பாளர் - நூலை அச்சிடுபவர்
பரவசப்படுத்தும் - மகிழ்ச்சி உண்டாகச் செய்யும்
பராமரித்து - பாதுகாத்து
பரிவாரம் - சேனை
பாலை - மணல் வெளி
பிடர் - கழுத்து
பிடரி மயிர் - கழுத்தில் உள்ள மயிர்
பிரசுரிக்க - வெளியிட
புதுமை - ஆச்சரியம்
புலராமல் - உலராமல்
புள்ளினம் - பறவைக்கூட்டம்
புறக்கணித்தல் - அசட்டை செய்தல்
புறம் - வெளி
புன்செய் (புஞ்சை) - கேழ்வரகு முதலியன விளையும் நிலம்
பூங்கா - பூஞ்சோலை
பெடை - பெண் பறவை
பெருநிதி - மிக்க செல்வம்
பேருரை - சொற்பொழிவு
பேறு - தன்மை, செல்வம்
பொருந்திய நூல் - பொருத்தமான சாஸ்திரம்
பொலிவுற - அழகு பெற
பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி
பொற்பு - அழகு
போக்கு - நடக்கை
பௌதிகம் - நிலம் முதலிய பூத சம்பந்தமான சாஸ்திரம்
மதலை - குழந்தை
மதிப்பு - பெறுமானம்
மந்தி - குரங்கு
மருத நிலம் - வயலும் வயலைச் சார்ந்த இடமும்
மறவர் - வேடர்
மன்னும் - நிலைபெற்ற
மாந்தர் - மனிதர்
மாய்த்து - கொன்று
மாவட்டம் - ஜில்லா
மாளிகை - பெருங்கட்டடம்
முகவரி - விலாசம்
முட்டுப்பாடு - குறைபாடு
முதுமொழி - பழமொழி
முழவு - மத்தளம்
முறியடித்தல் - தோல்வியுறச் செய்தல்
வயிரம் - உறுதி, வச்சிரக் கல்
வரலாறு - சரித்திரம்
வல்லரசு - வலிமை வாய்ந்த அரசு
வளநாடு - வளப்பம் பொருந்திய நாடு
வளவன் - சோழன்
வன்மை - வலிமை
வாழ்க்கைத் துணைவி - மனைவி
வானம் - ஆகாயம்
விஞ்சி - அதிகரித்து
விடுமுறை - ஓய்வு காலம்

விநோதம் - வேடிக்கை
விபத்து - ஆபத்து
விரட்டுதல் - ஓட்டுதல்
விற்போர் - வில்லுச் சண்டை
வெண்பொன் - வெள்ளி
வெப்பம் - சூடு
வெற்பு - மலை
வேற்று மொழி - அயல் பாஷை
வைதல் - திட்டுதல்
வையகம் - உலகம்

---





# SIRUVAR THEENTHAMIZH VACHAKAM

STANDARD V

BY

C. JAMBULINGAM, M.A., L.T.,

THE TEACHERS' PUBLISHING HOUSE
53-56, CORAL MERCHANT ST. - MADRAS-1

[ PRICE Re. 0-10-0